24th January 1961]

by the Deputy Commissioner of Law and Order? If this was wrong information why was not action taken against the bad character?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: This person did not preside over the meeting. He attended the meeting. The hand-bill was printed so that he could prove his respectability at the trial which was held.

SRI A. A. RASHEED: Is the Hon. Minister aware of the fact that this bad character is taking undue advantage of his friendship with the Deputy Commissioner of Law and Order and persecuting the merchants and hand-cart pullers in Periamet?

THE HON SRI M BHAKTAVATSALAM: I totally deny there is any friendship between the Deputy Commissioner of Law and Order and the bad character.

Mr. SPEAKER: Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

III.—CALLING ATTENTION TO THE WHOLESALE EVICTION OF TENANTS IN THANJAVUR DISTRTCT.

Mr. SPEAKER: I have received notice under Rule 41 from the hon. Members Sri C. Muthiah and Sri T. R. Ramamirtha Thondaman calling attention of the Hon. the Minister for Revenue to a matter of urgent public importance viz., the wholesale eviction of tenants in all towns in Thanjavur district.

The hon. Member Sri C. Muthiah will briefly state his case.

SRI C. MUTHIAH: கனம் சபாநாயகர் அவர்களே, தஞ்சை ஜில்லாவிலே சில முனிசிபல் நகரங்களிலே இந்தக் குடியிருப்புப் பாதுகாப்புச் சட்டம் இருந்துகொண்டு வருகிறது. சில மாதங்களுக்கு முன்பு சட்டசபையிலே தொழில் நடத்தும் ஸ்தாபனங்களுக்கு மாத்திரம் அந்த சட்டம் அமுலாகாது என்கிற திருத்தம் வந்த பிறகு, இப்பொழுது தஞ்சை, கும்பகோணம் போன்ற இடங்களில் கடைகள் இருக்கிற இடங்களை காலிசெய்யும்படியான நிர்ப்பந்தம் இப்பொழுது ஏற்பட்டு சில இடங்களில் காலி செய்து கொண்டு வருகிறார்கள். மேஜர் பஞ்சாயத்துக்களாகிய சீர்காழி, திருவாரூர் ஆகிய இடங்களில் குடியிருப்பு பாதுகாப்பு சட்டம் இல்லாத காரணத்தினால், இப்பொழுது பூமியினுடைய விலை ஏற்றத்தினால் ஆறு மாத காலத்தில் எல்லோரும் அந்த நகரங்களில் உள்ள பகுதிகளை விற்று வருகிறார்கள். அதனால் டவுன்புறங்களில் வெளியேற்றும்படியான சூழ்நிலை இருந்துகொண்டு வருகிறது. சென்ற மாதம் சீர்காழியில் ஒன்பது பேர்கள் கோர்ட்டில் கேஸ் நடத்தி வெளியேற்றியிருக்கிறார்கள் என்பதை கனம் அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவருகிறேன். இப்பொழுது

கூட 2, 3 கேஸ்களில் ரூ. 1,000, 1,500 செலவில் ஏழைக்குடியானவர்கள் கட்டின இடத்தை இடித்துக்கொண்டு போகக் கூடிய சூழ்நிலை இருந்தும் கொண்டிருக்கிறது என்பதை கனம் அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வருவதற்காகத்தான் அவசரமாக இந்தப் பிரேரபணையை நான் கொண்டு வந்திருக்கிறேன். கோர்ட்டில் போனால்கூட. அதற்காக 'ஸ்டே' கிடைக்கவில்லை. கிராமப் புறங்களில் இந்தப் பாதுகாப்பு கொடுத்த பிறகு நகர் புறங்களுக்கும் இது அவசியமாக இருக்கிறது. கிராமப் புறங்களில் இந்தப் பாதுகாப்பு கொடுத்த பிறகுகூட, அந்த இடத்தை காலி செய்யாவிட்டாலும்கூட மரங்களை வெட்டி தொந்தரவு கொடுப்பதினால் நாங்கள் அதற்காக தலையிட்டு சமாதானம் செய்வதிலேயே எங்கள் நேரம் பூராவும் போய்விடுகிறது. நாங்கள் அங்கு போய் கஷ்டப்பட்டு சமாதானம் செய்தாலும் கூட, மறுபடியும் மரங்களை வெட்டி தொந்தரவு கொடுக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதுபோல் டவுன்புறங்களில் இப்பொழுது சமாளிக்க முடியாத ஒரு நிலைமை ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. அரசாங்கத்திற்கு வருவாய் வருவதற்குக் கூட நான் ஒரு யோசனை கூற விரும்புகிறேன். வாங்குகிறவர்கள் தான் இப்பொழுது ஸ்டாம்பு ட்யூடி கொடுக்கவேண்டியதாக இருக்கிறது. விற்கிறவர்கள் ஒருவிதமான வரியும் கொடுக்க வேண்டியதில்லை. வாங்குகிறவர்களைப்போல் விற்பவர்களும் ஸ்டாம்பு ட்யூடி கொடுக்கவேண்டும் என்று சட்டம் செய்துவிட்டால் நலம் என்று நினைக்கிறேன். இப்பொழுது ஒன்றும் வரி இல்லாமல் இருப்பதால்தான் விற்பவர்கள் நகர்புறங்களிலே அவசர அவசரமாக விற்றுவிடுகிறார்கள் என்று நினைக்கிறேன். நான் இந்தப் பிரச்னையை இங்கே எழுப்பிய பிறகு, இதை அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வந்த பிறகு, விற்பவர்கள் இன்னும் வெகு வேகமாக விற்பார்களோ என்ற அச்சமும் ஏற்படுகிறது. அமைச்சர் அவர்கள்கூட சீர்காழியில் ஆஸ்பத்திரியை விஸ்தரிப்பதற்கு இடம் வேண்டும் என்று சுற்றிப் பார்த்தோம். ஆனால் அதற்கு இடம் கிடைக்காமல் நஞ்சை நிலம்தான் கிடைக்கிறது. அரசாங்கம் தயை கூர்ந்து இதற்காக 20 லட்சம் ரூபாய் சாங்ஷன் செய்திருந்தபோதிலும், சீர்காழியில் நஞ்சை நிலத்தைத் தான் அக்விஸிஷன் ப்ரொஸீடிங்ஸ் எடுத்து ஆர்ஜிதம் செய்ய வேண்டியிருக்கிறது. சீர்காழியில் ரூ. 2,40,000 வருமானம் இருந்தும், 22,000 ஜனத்தொகை இருந்தும் இன்னும் அது முதல் கிரேடு பஞ்சாயத்தாக இருக்கிறது. அதை முனிஸிபாலிடி இல்லை என்று ஒதுக்கித் தள்ளாமல், உடனடியாக அதற்கு இந்தச் சட்டத்தை விஸ்தரிக்கவேண்டும். கும்பகோணம், தஞ்சை ஆகிய இடங்களில் தொழில் நடத்துகிறவர்களுக்கும் இந்தச் சட்டத்தை அமுலாக்கவேண்டும். அமைச்சர் அவர்கள் இப்பொழுது பதில் சொல்லும்போது, சமாதானம் கொடுக்காமல் நல்ல முறையில் அங்கு சட்டம் உடனடியாக வரும் என்ற சந்தோஷ செய்தியை அன்புடன் சொல்லவேண்டுமென்று மிகத் தாழ்மையோடு கேட்டுக் கொள்ளுகிறேன்.

24th January 1961]

* THE HON. SRI M. A. MANICKAVELU : The hon. Member wanted elucidation on many points. However, I will confine myself to the subject given notice of by him. 9-30 a.m.

It has been brought to the notice of Government that there is wholesale eviction of tenants in all towns in Thanjavur district. Presumably, the hon. Members want the Government to help the tenants from being evicted, by applying the provisions contained in the Madras City Tenants Protection Act, 1921.

The Madras City Tenants Protection Act, 1921, was originally enacted with the main object of safegauarding tenants from eviction from residential buildings in the City of Madras. In 1955, the Act was amended so that it could be extended to other municipal towns and to areas within a radius of five miles from municipal towns where similar conditions prevailed and where there was real hardship. It was not however clearly provided in the Act at that time whether the protection from eviction was available also to the tenants of non-residential buildings. Advantage was taken of the above position by tenants of non-residential buildings. The protection from eviction thus enjoyed by the tenants of non-residential buildings was not consistent with the object for which the principal Act was enacted. It was therefore decided to restrict the protection afforded by the Act to tenants of residential buildings only and the Act was accordingly amended in 1960, making however an exception in the case of City of Madras and four municipal towns of Coimbatore, Madurai, Salem and Tiruchirappalli, where the protection extends also to tenancies of non-residential buildings.

In Thanjavur district the Madras City Tenants Protection Act, 1921, has already been extended to the municipal towns of Kumbakonam, Mayuram, Thanjavur and Nagapattinam and to the Tiruvadamarudur village in Kumbakonam taluk. The eviction proceedings referred to by the hon. Members should therefore be in respect of non-residential buildings only which have lost protection under the Act after the passing of the Amendment Act of 1960. If therefore protection has to be afforded in the case of non-residential buildings also in these places legislation will have to be undertaken in this regard. Hhe necessity for such a legislation has been recently examined on a request from some of the M.L.As. from Thanjavur district and it was considered not necessary as it will be inconsistent with the object of the Act, viz., to afford protection to tenancies of residential buildings only.

It may thus be seen that there is no urgent action for Government to take in the matter.

## IV.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont.*

RR. SPEAKER : We shall continue the discussion on the Governor's Address. To-day, the hon. Member, Sri M. Kalyanasundaram will speak first.

[24th January 1961

**Sri M. KALYANASUNDARAM** : கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்களுடைய பிரசங்கத்தின் மூலமாக நம்முடைய மந்திரி சபை என்னென்ன செய்திருக்கிறார்கள், இப்பொழுது நம்முடைய ராஜ்யத்தின் முன்பு இருக்கிற பிரச்னைகளைப்பற்றி நம்முடைய அமைச்சர்கள் வைத்திருக்கும் கருத்து என்ன என்பதை புரிந்துகொள்ள இது ஒரு வாய்ப்பு என்று கருதுகிறேன்.

முதலாவதாக நான் சொல்ல விரும்புவது, சட்டசபையைக் கூட்டுவதில் இவ்வளவு தாமதம் ஏற்படக்கூடாது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். அதுவும் ராஜ்யத்தில் முக்கியமான நிகழ்ச்சிகள் நடக்கக்கூடிய சமயத்தில் சட்டசபையை உடனடியாகக் கூட்டி இருக்கவேண்டும். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் நகல் திட்டம் பரிசீலிக்கப்பட்டு முடிவாக எவ்வளவு தொகை ஒவ்வொரு பிரிவுக்கும் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று தெரிந்தவுடனேயே, சட்ட சபையைக் கூட்டியிருக்க வேண்டியது அவசியம். அதோடு நம்முடைய ராஜ்யத்தில் மழை போன்ற இயற்கை கோளாறுகள் ஏற்பட்டதன் விளைவாக பெருத்த நஷ்டம் ஏற்பட்டதினால், சட்டசபையைக் கூட்டியிருக்கவேண்டும். மொத்தமாகப் பார்த்தாலும் வருஷா வருஷம் சட்டசபை கூடும் நாட்கள் குறைந்து வருகின்றன என்பதை அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். 1957-ல் 57 தினங்கள் நாம் கூடியிருக்கிறோம். 1958-ல் 63 தினங்கள் கூடியிருக்கிறோம். 1959-ல் 66 தினங்கள் கூடியிருக்கிறோம். 1960-ல் 41 தினங்கள்தான் கூடியிருக்கிறோம். காலண்டர் வருஷ அடிப்படையில்தான் நான் இந்தப் புள்ளி விவரங்களைக் கொடுக்கிறேன். சட்டசபை கூடுவது முக்கியமா இல்லையா என்பதைப் பற்றி அமைச்சர்கள் சிந்திக்கவேண்டும். அதற்குப் பதிலாக அமைச்சர்களின் சுற்றுப்பிரயாணம் தீவிரமாக்கப்பட்டு வருகிறது. ஒவ்வொரு ஜில்லாவிலும் 20 நாட்கள், 30 நாட்கள் என்று அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்கிறார்கள்—நேரடியாகப் பிரச்னைகளைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்ற அக்கறையோ என்னவோ. அப்படியென்றால் நாங்கள் எதற்காக சட்டசபைக்கு வருகிறோம்? மக்களுடைய பிரச்னைகளைப்பற்றித்தான் நாங்கள் இங்கே பேசுகிறோம். ஆகவே தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் மூலமாக மக்களுடைய பிரச்னைகளை அமைச்சர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். மக்களை வேண்டுமானால் திருப்திபண்ணுவதற்காக, அரசியல் நோக்கத்தோடு சுற்றுப்பிரயாணங்கள் செய்யலாம். ஆனால் உண்மையாகப் பிரச்னைகளைத் தெரிந்து கொள்ளவேண்டுமானால், எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக சட்ட சபை கூடுகிறதோ, எவ்வளவு அதிகமாக அங்கத்தினர்களுக்கு சந்தர்ப்பம் கிடைக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு மக்களுடைய பிரச்னைகளை அவர்கள் புரிந்துகொள்ள முடியுமென்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

24th January 1961]

**The Hon. Sri C. SUBRAMANIAM :** நவம்பர்-டிசம்பரிலேயே சட்டசபையைக் கூட்ட முடியவில்லை என்பதை கனம் அங்கத்தினர்கள் ஓரளவாவது உணர்ந்திருப்பார்கள். ஆகவே சர்க்கார் பேரில் குறை சொல்லுவதில் பிரயோஜனமில்லை.

**Sri M. KALYANASUNDARAM :** இப்பொழுதும் என்னால் உணர முடியவில்லை. நிதி அமைச்சர் அவர்கள் இங்கே இல்லாதது ஒரு காரணம். அவரும் அக்டோபர் 26-ம் தேதி வந்துவிட்டார். நவம்பர்-டிசம்பரில் பிளானிங் கமிஷன் கூட்டம் முடிந்த உடனேயே சட்டசபையைக் கூட்டியிருக்கவேண்டும். டிசம்பரில் சட்டசபையைக் கூட்டுவதற்கு எந்தவிதமான இடையூறும் இருந்ததாக எனக்குத் தெரியவில்லை.

அங்கத்தினர்கள் மூலமாக மக்களுடைய குறைகளைப் புரிந்துகொள்வதில் அமைச்சர்களுக்குக் கொஞ்சம் தயக்கம் இருக்கிறது. அரசியல் நோக்கம்தான் இதற்குக் காரணம். உதாரணமாக, நம்முடைய மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் என்னுடைய தொகுதியில் இருக்கக்கூடிய கிராமங்களுக்கு—அநேகமாக எல்லா கிராமங்களுக்கும் வருவதாக, இரண்டு தினங்கள் சுற்றுப் பிரயாணத்திற்குத் திட்டமிட்டு எனக்கும் புரோகிராம் வந்தது. நான் அதை வரவேற்று, " நானும் தங்களோடு வரலாமா ? தாங்கள் மக்களுடைய பிரச்னைகளைப் புரிந்துகொள்ளத் தயாராயிருந்தால் நானும் வந்து உதவி செய்யத் தயாராயிருக்கிறேன். ஆனால் அரசியல் பிரசாரத்திற்குப் போவதாயிருந்தால், நான் தங்களுக்கு சங்கடம் விளைவிக்க விரும்பவில்லை. தயவுசெய்து பதில் எழுதுங்கள் " என்று கேட்டுக்கொண்டேன். என்ன பதில் எழுதினார்கள் தெரியுமா ? " நான் இன்ஸ்பெக்ஷன் பங்களாவிலே இருக்கிறேன். அங்கே வந்து என்னை சந்தியுங்கள் " என்று எழுதினார்.

**The Hon. Sri P. KAKKAN :** அபிஷியல் டூரா அல்லது நான்-அபிஷியல் டூரா என்று கேட்டிருந்தார்கள். அபிஷியல் டூர்தான் என்றும், சந்திப்பதாக இருந்தால் சந்தியுங்கள் என்றும் எழுதினேன்.

**Sri M. KALYANASUNDARAM :** இரண்டு பேர் எழுதிய கடிதங்களும் இருக்கின்றன. வேண்டுமானால், அவைகளை வைக்கத் தயாராயிருக்கிறேன். இதிலிருந்து அவருடைய நோக்கம் தெரிகிறது. என்னுடைய தொகுதியிலுள்ள கிராமங்களைக் குறிப்பிட்டுத்தான் எழுதியிருந்தேன். என்னுடைய நோக்கம், அவருடன் சென்று பிரச்னைகளைத் தெரிவிக்க வேண்டுமென்பது. அதிர்ஷ்டவசமாகவோ, துரதிருஷ்டவசமாகவோ, அந்தக் கிராமங்கள் சென்ற தேர்தலின்போதுதான் என்னுடைய தொகுதியில் சேர்க்கப்பட்டன. அதற்கு முன்பு காங்கிரஸ்காரர்கள் பிரதிநிதிகளாய் இருந்தார்கள். எப்படியிருந்த போதிலும், அமைச்சர் அவர்கள் இவ்வளவு அக்கறை எடுத்துக்கொண்டு, அந்தப் பிற்போக்கான கிராமங்களுக்குச் சென்று சீர்திருத்தம் செய்வதைப்பற்றி நான் சந்தோஷப்படுகிறேன்.

[Sri M. Kalyanasundaram] [24th January 1961

இப்பொழுதாவது அங்குள்ள பிரச்னைகளைப் புரிந்து கொண்டிருப்பார்கள். நான் பிரதிநிதி என்பதற்காக இடையூறு செய்யாமல் வேலைகளைத் துரிதமாகச் செய்யவேண்டும். அமைச்சர் அவர்களே நேரில் பார்த்துவிட்டு வந்ததால், பிரச்னைகளை சீக்கிரம் தீர்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சட்டசபை அதிக நாட்கள் கூடுவதற்கு நவம்பர்—டிசம்பரில் முடியாது என்பது பிரச்னையல்ல. சென்ற வருஷம் 41 நாட்கள் தான் சட்டசபை கூடியிருக்கிறது. டிசம்பர் மாதத்தில் அங்கே கூட்டம் இருந்தது, இங்கே காங்கிரஸ் இருந்தது என்று பதில் சொன்னால் அது சரியாக இருக்காது.

அடுத்தபடியாக பிரச்னைகளுக்கு வருவோம். கவர்னர் அவர்கள் உரையில் திட்டங்கள் வெற்றிகரமாக நடந்திருப்பது பற்றியும், இன்னும் வேலைகள் எல்லாம் திறமையாக நடந்திருப்பது பற்றியும், பருவ காலம்கூட அனுகூலமாக இருப்பது பற்றியும் குறிப்பிட்டு இருக்கிறார்கள். பருவ நிலை கூட சாதகமாக இருக்க வேண்டுமென்பதுதான் என்னுடைய அவா. அதனால் ஏற்படும் கோளாறுகளை அரசியலுக்குப் பயன்படுத்தக் கூடாது. நம்முடைய ராஜ்யத்தை எடுத்துக்கொண்டாலும், தேசம் பூராவும் எடுத்துக்கொண்டாலும், இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களும் திட்டக் குறிக்கோள்படி நடந்திருக்கின்றன என்றுதான் நம்முடைய அமைச்சர்களும், மத்திய சர்க்காரில் உள்ள அமைச்சர்களும் சொல்லுகிறார்கள். இதை நான் மறுக்கவில்லை. புள்ளி விவரங்கள் நிரூபிக்கின்றன. நம்முடைய ராஜ்ய சர்க்காரின் விசேஷப் பெருமை என்னவென்றால், இந்தியாவிலேயே தாங்கள் தான் முதல் வரிசையில் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். இதையும் நான் மறுக்கவில்லை. பிளானிங் கமிஷன் நகலில் கூறியிருக்கும் புள்ளி விவரங்கள் என்ன? நம்முடைய தேசத்தின் மொத்த வருமானம் 42 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அதையும் நான் ஒப்புக்கொள்கிறேன். ஏனென்றால், பிளானிங் கமிஷன் மூலம்தான் புள்ளி விவரங்கள் பெற முடியும். தனிப்பட்ட முறையில் நபர் ஒன்றுக்கு வருமானம் 20 சதவிகிதம் அதிகரித்திருப்பதாகக் கூறுகிறார்கள். அதையும் ஒப்புக் கொள்ளலாம். திட்டத்தில் போட்ட குறிக்கோளின்படி உணவு உற்பத்தி, துணி உற்பத்தி எல்லாம் பெருகியிருக்கிறதா என்றால், கட்டாயம் பெருகியிருக்கிறது. விவசாய பொருள்கள் உற்பத்தியை எடுத்துக்கொண்டாலும், முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பித்த காலத்தில் குறிப்பு எண் 95-ஆக இருந்தது. அதாவது 1949-50-ல் 100 என்று வைத்துக்கொண்டோமானால். 1960-61-ல் இது 135-ஆக இருக்குமென்று உத்தேசமாக மதிப்பிடப்பட்டிருக்கிறது. 1958-59-னுடைய உண்மையான உற்பத்தி 132-ஆக உயர்ந்திருக்கிறது. ஆகவே, 135-ஆக இருக்கும் என்று நம்பலாம். உத்தேசத்தில் தவறு இல்லை. உணவு தானியங்கள், அரிசி, நெல், புஞ்சை தானியங்கள் பருப்பு முதலியவை ஒட்டுமொத்தமாக உற்பத்தி, 1951-52-ல் 52,500,000 டன் ஆக இருந்தது, 1960-61-ல் 75,000,000

24th January 1961] [Sri M. Kalyanasundaram]

டன்னுக தேசம் பூராவும் உற்பத்தியாகும் என்று கணக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதைச் சந்தேகிக்க வேண்டிய அவசியம் இல்லே. ஓரளவு கூடுதலாக வரலாம், அல்லது குறையலாம். ஆனல், திட்டப்படி நிறைவேறும் என்பதில் சந்தேகம் இருக்க வேண்டியதில்லே. அதே போல, எண்ணெய் வித்துக்களே எடுத்துக் கொண்டாலும், கரும்பு முதலிய விளே பொருள்களும் உற்பத்தியில் பெருகியிருக்கிறது. (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம்: என் விலே ஏறியிருக்கிறது!) அது அடுத்த கேள்வி; அடுத்த கேள்விக்கு வருகிறேன். ஆகவே, உணவுப் பொருள்கள் 43 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது. எண்ணெய் வித்துக்கள் 41 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது. இவைகளே திட்ட கமிஷன் புள்ளி விவரங்களிலிருந்து கொடுக்கிறேன். தேச முன்னேற்றம் என்ருல், மக்கள் முன்னேற்றம் இருக்க வேண்டும். தேசம் சுபிட்சமாக இருக்கிறது முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்ருல், அது நடைமுறையில் மக்கள் வாழ்க்கையில் பிரதிபலிக்க வேண்டும். ஜனங்கள் வாழ்க்கை எப்படி இருக்கிறது? விவசாயிகள் எப்படி இருக்கின்றனர்? உழைக்கும் மக்கள் நிலேமை எப்படியிருக்கிறது? மக்களில் 95 சத விகிதம் உழைக்கும் தொழிலாளிகள். இந்த விலேவாசி உயர்வுக்கேற்றபடி உழைக்கும் மக்களின் சம்பளம், ஊதியம் உயர்ந்திருக்கிறதா? தேசத்தின் சுபிட்சத்தை எப்படிப் புரிந்து கொள்ளுகிறது? சுபிட்சத்தை காணும் அளவுகோல் என்று எதை வைக்கவேண்டும். தேச மொத்த வருமானம், உற்பத்தி பெருக்கு என்பதை மட்டும் வைத்துக்கொண்டு, தேசத்தின், மக்களின் சுபிட்சத்தை கணக்கிடமுடியாது. எந்த அளவுகோல் இருக்கிறது? விலேவாசிதான் அளவுகோல். அதற்கும் அரசாங்கம் கொடுத்திருக்கும், கொடுக்கும் புள்ளி விவரங்கள்தான். 1959-ம் வருஷம் ஜனவரி மாதத்தில், 421 புள்ளி, 1960 ஜனவரியில் 441, அதுவே 1961-ல் நாம் இப்பொழுது 1961 ஜனவரியில் இருக்கிருேம், 476. இந்த மூன்று வருஷத்தில், 421-லிருந்து, 476-ஆக உயர்ந்திருக்கிறது. ஆனல் அமைச்சரவர்கள் குறைந்திருக்கிறது என்று சொல்லலாம். எதை வைத்துக் கொண்டு? 1960 டிசம்பரில் 488-ஆக இருந்தது இந்த மாதம் 476 புள்ளியாகக் குறைந்திருக்கிறது என்ற காரணத்தை வைத்துக் கொண்டு விலேவாசி குறைந்திருக்கிறது என்று, குறைய ஆரம்பித்திருக்கிறது என்று கூறலாம். ஆனலும், திட்ட காலத்தில் விலேவாசிகள் வெகு அதிகமாக ஏறியிருக்கிறது. இந்த ஏற்றத்திற்குச் சரியாக சம்பளமோ, தனி நபர் தொழிலாளிகளானலும் சரி, சர்க்கார் ஊழியர்களானலும் சரி, இந்த விலேவாசி உயர்வுக் கேற்றபடி உயர்ந்திருக்கிறதாகக் காட்ட முடியாது. நாட்டு முன்னேற்றத்தின் பலனே மக்கள் அனுபவிக்கிருர்களா என்ருல், இடையாது. ஒரு சிலர் அனுபவிக்கிருர்கள். உற்பத்தி பெருகியும், உயர்வு ஏற்பட்டும், அதன் பலனே கைவிரலால் எண்ணக் கூடிய ஒரு சிலர் தான் அனுபவிக்கிருர்கள்; ஆனல், மெஜாரிட்டி வயலில் வேலே செய்யும் ஊழியர்களோ, கிராமப் புறங்களில் உழைக்கும் தொழிலாளிகளோ, அலுவலகங்களில் வேலே செய்யும் சர்க்கார் ஊழியர்களோ அனுபவிக்கவில்லே: அவர்கள் வாழ்க்கைத் தரம் தேசத்தில்

[Sri M. Kalyanasundaram] [24th January 1961

சுபிட்சம் அதிகரித்திருக்கும் அளவுக்கு உயரவில்லை. இதை சர்க்கார் புள்ளி விவரங்களே எடுத்துக் காட்டுகிறது. என்ன நடவடிக்கை எடுக்கிறீர்கள் இதைத் தடுக்க? இதுதான் முக்கியப் பிரச்சினை; இதில் விசேஷ கவனம் செலுத்தப்படவேண்டும்.

சோஷலிசம் போன்ற சமுதாயம் என்று சொல்லுகிறீர்கள். அது கவர்ச்சிகரமாக இருக்கும் கருத்து. "சோஷலிஸத்திற்கு" வெற்றி மேல் வெற்றி இருக்கிறது; பார்க்கிறோம். நாமும் "சோஷலிஸம்" என்று சொல்லி, மக்களின் வோட்டுகளைப் பெற, கவனத்தைக் கவரக்கூடிய கருத்துக்களை மட்டும் சொல்லிக் கொண்டு போனால் சரியாகாது. கருத்துப் படி நடக்க வேண்டும் என்று அமைச்சரவர்களுக்குச் சொல்லிக் கொள்ளுகிறேன். அதில் இடையூறு எங்கே இருக்கிறது: மத்திய சர்க்காரிலா, அல்லது ராஜ்ய சர்க்காரிலா? அப்படி இருக்கும் இடையூறுகளைத் தவிர்க்க பரிகாரம் தேடவேண்டும். உற்பத்தி, சுபிட்சம் இவற்றின் பலன் ஒரு சிலருக்குக் கிடைத்திருக்கிறது, மக்களுக்குக் கிடைத்தால்தான் அது தேசத்தின் சுபிட்சம் ஆகும். அமைச்சரவர்கள் அதற்குப் பரிகாரம் காணவேண்டும். நம் ராஜ்யத்தில் இடையூறு, அதற்கு என்ன பரிகாரம் என்று கவர்னர் உரையில் என்ன தேடினாலும், ஒரு ஆதாரத்தையும் காணோம் என்று வருந்துகிறேன். ஆனால், ஒரு ராஜ்யத்தில் நடவடிக்கை எடுத்தால் மட்டும் போதாது; தேசம் பூராவும் எடுக்கவேண்டும். ஒரு ராஜ்யத்தில் மட்டும் சுபிட்சம் முந்திக்கொண்டு போகமுடியாது. தேசம் பூராவும் முன்னேறி எல்லா மக்களும் பயனடைய வேண்டும் என்பதில் நம்பிக்கை கொண்டவன் நான்.

மத்திய சர்க்கார் வினியோக முறையில் மக்களுக்குக் கிடைக்கும் முறையில்லாமல், கொள்கை சோஷலிஸ கருத்துக்கள் என்று வோட்டுப் பிடிக்கும் கருத்துக்களாக இருக்குமே தவிர, மக்களுக்கும் பயன் படும் கொள்கையைப் பின்பற்றுகிறீர்கள் என்று சொல்ல முடியாது.

அதோடு இதை விட்டு விட்டு, அடுத்ததாக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நாம் பார்ப்போம். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நம் ராஜ்ய சர்க்கார் சிபாரிசு கிட்டத்தட்ட 398 கோடி ரூபாய் அளவில் பல துறைகளில் அபிவிருத்தி வேலைகள் எடுக்கப்படவேண்டும் என்று குறிப்பிட்டிருந்தது. ஆனால், அதில் ரூ. 291 கோடிதான் கிடைத்திருக்கிறது. அதையாவது எப்படிப் பயன்படுத்துவது, இந்தத் தொகையை வைத்துக்கொண்டு எவ்வளவு அதிகப்படியான திட்டங்கள் போடுவது என்பதைப் பற்றியெல்லாம் அமைச்சரவர்கள் ஆலோசனைக் குழுவில் ஒன்றும் விவாதிக்காமல், சட்டசபையிலும் வைத்து விவாதிக்கும் அளவுக்கு இல்லாமல் இருக்கிறது. கவர்னர் உரைமீது விவரமாகப் பேச சந்தர்ப்பம் கொடுக்கும் சந்தர்ப்பத்தில், இதற்கும் இரண்டு தினங்கள் ஒதுக்கி, பின்னால் தனியாக சந்தர்ப்பம் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது, சில முக்கியப்

24th January 1961] [Sri M. Kalyanasundaram]

பிரச்சினைகள்மீது அதிகக் கவனம் செலுத்தப்படவேண்டும் என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். ரூ. 291 கோடி என்று நம் திட்டத்தில் ஒதுக்கி இருப்பதால், குறைந்திருப்பதின் காரணமாக, முதல் பலி பாசனத் திட்டங்கள். நடுத்தரத் திட்டங்களுக்கு அதிகக் கவனம் செலுத்தவேண்டும். சிறிய பாசனத் திட்டங்களைச் செய்ய வேண்டும் என்று ஆலோசனைக் குழுவில் அமைச்சரவர்கள் ஏற்றுக் கொண்டார்கள், கிட்டத் தட்ட ரூ. 51 கோடி ரூபாய் வரை செலவு செய்ய யோசனை கள் நாம் கொடுத்திருந்தோம், நம் தேவைக்குத் தகுந்தாற்போல. இப்பொழுது பார்க்கும் போது, ரூ. 29 கோடியாக பாசன வசதிக்கு ஒதுக்கியிருக்கிறார்கள். அப்படியானால், நடுத்தர பாசனத்திட்டங் களின் கீழ் 22 திட்டங்கள் போட்டிருந்தோம்; பல ஜில்லாக்களி லும், மக்கள் எதிர் பார்த்திருந்தார்கள். இப்பொழுது அவை களில் ஒரு திட்டம்கூட எடுத்துக் கொள்ளப்படாது என்று தோன்றுகிறது. இது அமைச்சரவர்கள் டிசம்பர் மாதம் கொடுத் திருக்கும் அறிக்கையிலிருந்து தெளிவாகிறது. வார்த்தைக்கு நடுத்தரத் திட்டங்கள் எடுத்துக் கொள்ளப் படலாம் என்று சொல்லப் பட்டிருக்கிறது. கால்வாய் அபிவிருத்தித் திட்டங்களை எடுத்துக் கொண்டு, பல சிற்றாறுகளுக்கும் நீர் தேக்கங்கள் கட்டி, பின்தங்கிய பிரதேசங்களுக்காகப் போட்ட 22 திட்டங்களில் ஒன்றுகூட சேர்த்துக் கொள்ள வாய்ப்பில்லை என்று பார்க்கும் போது, பின்தங்கியிருக்கும் பகுதிகளெல்லாம், முன்போலவே தான் இருக்கும் என்று நினைக்கிறேன். இங்கே கொடுத் திருக்கும் அறிக்கையில் 45-வது பக்கத்தில் திட்டங்கள்பற்றி இருக்கிறது. இந்தத் திட்டங்களுக்கு ரூபாய் 28 கோடி யளவில் தொகை வேண்டும் என்றோம். அதில் ஒன்றுகூட சேர்க்கப்படாமல் இருப்பது, எல்லா ஜில்லாக்களிலும் உள்ள மக்கள் ஏமாற்றமடையக்கூடிய நிலையில் இருக்கிறது. வளர்ச்சி யடைந்த ஜில்லா முன்னேறிக்கொண்டே இருக்கிறது. ஆனால், குடிதண்ணீர்கூட இல்லாத ஜில்லா அதே நிலையில் இருக்கிறது. அப்படி அவை நீடித்துக்கொண்டே இருக்கும் நிலையை மாற்றி யமைக்க யோசனைகள் என்ன என்பதைப் பற்றி அமைச்சரவர்கள் சொல்லவேண்டும். என் யோசனை, இருக்கக்கூடிய தொகையை ஓரளவு நடுத்தரத் திட்டங்களுக்காக ஒதுக்க வேண்டும். அதே போன்று, சிறிய பாசனத் திட்டங்கள் சம்பந்தப்பட்ட மட்டில், குளம், மராமத்து இவற்றிற்காவது நிதி ஒதுக்க வேண்டும். இதுவே என் யோசனை. இதைப்பற்றி கவர்னர் பிரசங்கத்தில் பார்த்தால், "நடுத்தரப் பாசனத் திட்டங்கள் சிலவற்றையும் நிறைவேற்ற உத்தேசித்திருக்கிறோம்" என்று கண்டிருக்கிறது. ஆனால், நிதி திரட்டப் போகிறார்களா, எங்கிருந்து, எப்பொழுது, என்ற விவரங்களைத் தெரிந்துகொள்ள ஆவலாக இருக்கிறேன்.

அடுத்தபடியாக, தொழில் வளர்ச்சியை எடுத்துக் கொள்வோம். நம் தமிழ்நாடு பூராவும் கடந்த பத்து வருஷ காலமாக ஆவலாக எதிர்பார்த்திருப்பது சேலத்தில் நிறுவுவதாக வாக்களிக்கப்பட் டிருக்கும் உருக்கு ஆலைத் திட்டம். அதைப்பற்றி பரிட்சை செய்வதற்காக 75 லட்ச ரூபாய் நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது.

அதற்காக ஐ.ஏ.எஸ். உத்தியோகஸ்தர் ஒருவர் பிரத்தியேகமாக நியமிக்கப்பட்டிருக்கிறார். இரண்டு விஷயங்களிலே கொஞ்சம் முன்னேற்றம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. ஆனால், அது நடைமுறைக்கு வரக்கூடிய அறிகுறி என்ன இருக்கிறது என்றால் 1952-ம் வருஷத்திலே இருந்த நிலையிலேதான் இன்னும் இருந்து கொண்டிருக்கிறோம் என்பதைப் பார்க்கும்போது வருத்தப் படாமல் இருக்க முடியாது. நெய்வேலியில் உற்பத்தி செய்யப்பட வேண்டிய பழுப்பு நிலக்கரியைப் பொருத்திருக்கிறது சேலத்தின் இரும்பைப் பயன்படுத்துவது. உருக்கு ஆலை சேலத்தில் இருக்குமா நெய்வேலியில் இருக்குமா? என்பது அல்ல பிரச்னை. தமிழகத்தில் எங்கு வைத்தாலும் அதைப்பற்றி ஆட்சேபிக்க முடியாது. தொழிலின் நன்மையைப் பொருத்து எந்த இடத்தில் வைக்கவேண்டுமோ அங்கு வைக்கலாம். அதைப்பற்றி மாறு பட்ட கருத்து இல்லை. இப்படிப்பட்ட தொழிற்சாலை வருவது என்பதிலே எல்லோருடைய கருத்தும் ஒன்றாக இருக்கவேண்டும். சேலத்தில் வந்தாலும் சரி, நெய்வேலிக்கு அருகாமையில் வந்தாலும் சரி, எப்படியும் தொழில் வரவேண்டும் என்பதுதான் முக்கியம். ஆனால், நெய்வேலிக்கு அருகாமையில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் வருமா, என்பது பற்றி அமைச்சர் அவர்கள் ஒளிவு மறைவு இல்லாமல் பதில் சொல்லவேண்டும். நெய்வேலிக்கு அருகாமையில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் வருவதற்கான ஏற்பாடுகள் என்ன என்பதைத் தெரி விக்க வேண்டும். ஏற்பாடுகளில் இருக்கும் சந்தேகத்திற்கான இடங்கள் என்ன என்பதை நான் சொல்லி விடுகிறேன். அமைச்சர் அவர்கள் இப்பொழுது பதில் சொல்லாவிட்டாலும் மத்திய அரசாங்கத்தைக் கேட்டாவது பதில் சொல்லவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

முதலிலே லிக்னைட்டை எடுத்துக் கட்டி செய்வது, அதாவது பிரிக்கெட்டிங் என்பது முக்கியமானது. லிக்னைட்டைத் தோண்டி எடுத்து அப்படியே வைத்துக்கொண்டிருந்தால் சீக்கிரம் எரிந்து விடும். கட்டி செய்துதான் தொழில்களுக்கு பயன்படுத்த முடியும். நிலக்கரி விஷயத்தில் பற்றாக்குறையாக இருக்கும் ராஜ்யம் நம்முடைய ராஜ்யம். அப்படியிருக்கும்போது சேலம் இரும்பை உருக்குவதற்கு மட்டுமல்லாமல், மற்ற தொழில்களுக்கும் பயன்படுத்தவும், குடும்பத் தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடிய அளவுக்கும் சிறு உலைகளை ஏற்படுத்த பழுப்பு நிலக்கரியை 'பிரிக் கெட்' செய்யவேண்டுமென்பது முக்கியமானது. அந்த பிரிக் கெட் செய்யக்கூடிய மெஷினரியை எங்கே வாங்குவது என்றாவது ஒப்பந்தம் ஆகியிருக்கிறதா? மெஷினரி எங்கே இருக்கிறது, எந்த தேசத்தோடு அதுபற்றி பேச்சு வார்த்தை நடந்துகொண்டிருக் கிறது, எப்பொழுது கிடைக்கும் என்பது கூட இன்னும் முடிவு செய்யப்படவில்லை. 35 லட்சம் டன், 45 லட்சம் டன் எடுப்பது என்று முடிவு செய்துவிட்டதாகச் சொல்லி அழகாக காகிதத்தில் அச்சடித்துக் காட்டுவதில் பயன் இல்லை. 45 லட்சம் டன் இந்த வருஷத்தில் வருமா, அடுத்த வருஷத்திலாவது வருமா, அதற்கு அடுத்த வருஷத்திலாவது வருமா, எப்பொழுது பயன்படுத்த

24th January 1961] [Sri M. Kalyanasundaram]

முடியும் என்று பார்த்தால் அதற்கு பிரிக்கெட்டிங் மெஷினரி கூட வாங்கப்படவில்லை. அதற்கான டெண்டர் கேட்டு கூட இன்னும் முடிவு செய்யப்படவில்லை என்ற விவரத்தை மத்திய அமைச்சர் பார்லிமெண்டில் கூறியிருக்கிறார். அப்படியிருக்கும்போது 35 லட்சம் டன்னிலிருந்து 45 லட்சம் டன் என்று உயர்த்திக்கொண்டு விடுவது என்றால், அது நம்மை நாமே திருப்தி செய்து கொள்வதாக இருக்கிறதே தவிர, நடைமுறையில் வரக்கூடிய அறிகுறியைக் காணோம் என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

(Sri A. Vedarathnam in the Chair.)

ஆலோசனைக் குழுவில், ஒரு கோடி டன் வருஷமொன்றுக்கு எடுப்பதற்கான திட்டம் வேண்டுமென்று நாம் தெரிவித்திருந்தோம். ஒரு கோடி டன் வருஷமொன்றுக்கு எடுக்க என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பார்க்கவேண்டும். நம்முடைய ராஜ்யம் எரிபொருள் பற்றுக்குறையுள்ள ஒரு ராஜ்யம். தொழில்களுக்குத் தேவையான நிலக்கரி கிடைப்பதில்லை, அதனால் தொழில் பாதிக்கப்படுகிறது என்ற குறை தொழில் அதிபர்களிடத்தில் இருந்து வருகிறது. இதைப் பார்க்கும்போது பழுப்பு நிலக்கரியைத் துரிதமாக எடுப்பதற்கும், இதை நம்முடைய ராஜ்யத்தில் பயன்படுத்துவதற்கும் என்ன நடவடிக்கை எடுக்கப்படுகிறது என்பதைப் பார்க்கும்போது நெய்வேலித் திட்டத்தில் மின்சார நிலையம் ஒன்றுக்குத்தான் மெஷினரி வந்து வேலை நடந்து கொண்டிருப்பதாகத் தெரிகிறதே தவிர, பிரிக்கெட்டிங் ப்ளாண்ட் சம்பந்தமாக இன்னும் எந்த வேலையும் தொடங்கப்படவில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : பர்ட்டிலைஸர் பாக்டரி. .

SRI M. KALYANASUNDARAM : இவை இரண்டிலேதான் வேலை தொடங்கப்பட்டிருக்கிறது. திட்டப்படி வேலை நடக்கும் என்ற நம்பிக்கை இருக்கக்கூடியது, இவை. மற்றவை எதுவும், சேலம் உருக்கு ஆலை, பிரிக்கெட்டிங் ப்ளாண்ட் இவைகளைப் பொறுத்தவரையில் திட்டமிட்ட காலத்தில் வந்து சேரும்; தொழில்கள் தொடங்கப்படும் என்ற நம்பிக்கை எனக்கு இன்னும் ஏற்படவில்லை. அமைச்சர் அவர்களுக்கு நம்பிக்கை இருந்தால் சொல்லட்டும். அதைச் சந்தோஷத்தோடு வரவேற்கத் தயாராயிருக்கிறேன்.

இப்பொழுது எதையுமே அரசியல் கண்ணோட்டத்தோடு பார்க்கிறார்கள். தூத்துக்குடி ஆழ்கடல் துறைமுகத்தைப்பற்றிக் குறிப்பிட்டால், உடனே, அரசியல் லாபத்திற்காகப் பேசுகிறார்கள் என்று ஒரு கனம் அங்கத்தினர் பேசுகிறார். தூத்துக்குடி துறைமுகம் வந்தால் என்ன, அதில் என்ன அரசியல் லாபம் வந்துவிடப் போகிறது? மக்களுக்கு லாபமா என்று பார்க்கவேண்டுமே அல்லாது, இந்தக் கட்சிக்கு லாபமா அந்தக் கட்சிக்கு லாபமா என்று பார்த்துக்கொண்டிருக்கக் கூடாது. எதிர்க் கட்சிகளுடைய கடமை, சர்க்கார் செய்வதில் குறைகள் இருந்தால் அவைகளை

எடுத்துக்காட்டுவதும், செய்யாத் தவறியதை எடுத்துக் காட்டுவதும் ஆகும். தூத்துக்குடி துறைமுகம் என்ன ஆயிற்று என்று கேட்ட வுடனே அரசியல் கட்சிகள் தங்களுடைய சுயநலத்தைப் பார்க்கிறார்கள் என்ற குறை சொல்லப்படுகிறது. நாங்களும் காங்கிரஸ் கட்சிக்காரர்களைப் பார்த்து இதே மாதிரி சொல்லக்கூடும். 'அரசியல் நோக்கத்தோடுதான் ஏதோ திட்டங்களைப் போட்டு நிறைவேற்றுகிறதாக மக்களிடம் சொல்கிறீர்கள்' என்று. ஆகவே தூத்துக்குடி துறைமுகத்தின் நிலைமை என்ன என்பதை அமைச்சர் அவர்கள் தெளிவுபடுத்த வேண்டும்.

(Mr. Speaker in the Chair.)

தூத்துக்குடித் துறைமுகத்தை ஆழ்கடல் துறைமுகமாகச் செய்யவேண்டும் என்ற அளவுக்கு உறுதிமொழி கொடுத்திருப்பதை வரவேற்கிறேன். திட்டம் என்ன, மத்திய அரசாங்கம் எத்தனை கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள்? சேது சமுத்திரத் திட்டம் எப்பொழுது எடுத்துக்கொள்ளவேண்டும், அதன் முழு விவரங்கள் என்ன என்று விசாரணை செய்த ஸர் ஏ. ராமசாமி முதலியார் கமிட்டி என்ன கூறியிருக்கிறது? அவர்கள், சேது சமுத்திரத் திட்டம் இல்லாமல் தூத்துக்குடி துறைமுகத்தை அபிவிருத்தி செய்வது லாபகரமாக இருக்காது என்று கூறியிருக்கிறார்கள். தூத்துக்குடி துறைமுகத்தை மட்டும் ஆழ்கடல் துறைமுகமாக அபிவிருத்தி செய்துவிட்டால் முழுப் பலனும் இருக்காது. சேது சமுத்திரம் கால்வாய் வழியாக பெரிய கப்பல்கள் போவதற்கு முட்டுக்கட்டையாக திட்டு இருப்பதால் அந்தத் திட்டு இல்லாமல் கால்வாய் வெட்டினால், அதன் மூலம் சென்னை, விசாகப்பட்டணம், கல்கத்தா போன்ற துறைமுகங்களிலிருந்து வரும் கப்பல்கள் இலங்கையைச் சுற்றுவதற்குப் பதிலாக நேரடியாகப் போவதற்கு மார்க்கம் கிடைக்கும். சேதுசமுத்திரத் திட்டத்தோடு இணைத்து தூத்துக்குடித் துறைமுகத்தை அபிவிருத்தி செய்தால்தான் முழுப் பலன் உண்டு என்று தெளிவாக எழுதியிருக்கும்போது, சேது சமுத்திரத் திட்டம் என்ன ஆயிற்று, அது எப்பொழுது ஏற்படும் என்பதைப்பற்றி அமைச்சர் அவர்கள் தெரிவிக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

அடுத்தபடியாக, நம்முடைய ராஜ்யத்தில் சமீபத்தில் புதிய தொழில்கள் தோன்றியிருக்கக் கூடியதைப் பார்க்கும்போது, பொதுத் துறையில் தொழில் தோன்றுவதே ரொம்ப துர்லபமாக இருக்கிறது. எந்தக் கட்சி அதிகாரத்தில் இருக்கிறது என்பதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. அரசாங்கம் தொழில் நடத்தினால் அது தேசத்திற்கு நன்மை. தனிப்பட்டவர்கள் கையிலே இருக்குமானால் அவ்வளவு பலன் இருக்காது. தற்காலிகமாக வேண்டுமானால் தனியார் துறையில் தொழில்கள் ஏற்படலாம். அதை ஆட்சேபிக்கவில்லை. எப்படியாவது தொழில்கள் வருவது நல்லதுதான். இருந்தாலும் இரண்டில் எது சிறந்தது என்றால், தனிப்பட்டவர்கள் கையில் விடுவதனால் எத்தனையோ கஷ்டங்கள் ஏற்படுகின்றன, சர்க்கார் கையில் இருந்தால் சில கஷ்டங்கள்

24th January 1961] [Sri M. Kalyanasundaram]

இருக்கலாம். சில குறைபாடுகளை எடுத்துக்காட்டலாம். சர்க்கார் நடத்தும் பஸ் ட்ரான்ஸ்போர்ட்டைப்பற்றி கிண்டலும் கேலியுமாக சில பத்திரிகைகளில் எழுதப்பட்டிருக்கிறது. நான் ஒரு விஷயத்தைச் சவால் விட்டுக் கேட்கிறேன். சர்க்கார் பஸ்ஸில் உட்கார இருக்கும் வசதி போல் வேறு எந்தத் தனிப்பட்டவர்கள் நடத்தும் ட்ரான்ஸ்போர்ட் பஸ்ஸிலாவது இருக்கிறதா என்று நான் கேட்கிறேன். எவ்வளவுதான் தேசபக்தராக, காங்கிரஸ்காரராக இருப்பவராக இருந்தாலும் அவர் நடத்தும் பஸ் டிரான்ஸ்போர்ட்டிலாவது ஸீட் வசதி நன்றாக இருக்கிறதா பாருங்கள். பதினைந்து அங்குல அகலமுள்ள சீட்டை குறுக்கே வெட்டி உட்காருவதற்கு 9 அங்குலமாக வைத்திருக்கிறார்கள். அம்மாதிரி சீட்தான் தனிப்பட்ட முதலாளிகள் பஸ்களில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் சர்க்கார் நடத்தும் பஸ்களில் உள்ள சீட் வசதி தனிப்பட்டவர்களுடையதைவிட சிறப்பாக இருக்கிறது. மற்ற குறைபாடுகள் இருக்கலாம். ஆனால், அரசாங்கம் நடத்துவதில் அநேக நன்மைகள் இருக்கின்றன. எண்ணெய் வாங்குவதில் சில தவறுகள் செய்கிறார்கள். தெரிந்தே செய்கிறார்கள். உதாரணமாக, சோவியத் யூனியனிலிருந்து நமக்கு எண்ணெய் தருவதாகத் தெரிவித்தார்கள்.

THE HON. SRI K. KAMARAJ : சோவியத் யூனியனைக் குறிப்பிட ஆரம்பித்து விட்டீர்களா ?

SRI M. KALYANASUNDARAM : அதனால் என்ன தப்பு ? யார் நமக்கு மலிவாகக் கொடுத்தாலும் வாங்கவேண்டியதுதானே சோவியத் யூனியன் மலிவாகக் கொடுப்பதற்கு முன்வந்தார்கள் அவர்களும் நம் அரசாங்கத்தின் மூலமாகத்தான் கொடுக்கமுடியும் முதலில் ஒரு விலை நிர்ணயிக்கப்பட்டது. அமெரிக்கக் கம்பெனிகளும் பிரிட்டிஷ் கம்பெனிகளும் ஒரு நயா பைசா குறைத்து டெண்டர் போட்டார்கள். ஆகவே அவர்களிடமிருந்து எண்ணெய் வாங்குகிறார்கள். லாபம் இந்திய சர்க்காருக்குத்தான் போகிறது, தனிப்பட்டவர்களுக்குப் போவதில்லை என்றாலும், இதிலே சிந்தித்துப் பார்த்து நாம் முடிவு எடுக்க வேண்டும். ஒரு நயா பைசா குறைவாக டெண்டர் கொடுத்தார்கள் என்றால் என்ன அர்த்தம்? டிபார்ட்மெண்டை அந்த லட்சணத்தில் வைத்திருக்கிறோம் என்று இதிலிருந்து புரிகிறது. என்ன ரேட்டுக்கு டெண்டர் போடப்பட்டது என்பதை தெரிந்துகொண்டு ஒரு நயா பைசா குறைத்துப் போட்டிருக்கிறார்கள். அதனால் பர்மா ஷெல்லுக்கும், எஸ்.வி.ஒ.ஸி-க்கும் ஒப்பந்தம் பண்ணிவிடுகிறார்கள். நமக்குத் தேவையான எண்ணெயை மலிவான விலைக்கு வாங்குவதாக இருந்தாலும். . . .

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் சொல்வது அவ்வளவும் தவறு. இது சம்பந்தமாக தனிக் கேள்வி போட்டால் விவரங்கள் கொடுக்கிறேன்.

[24th January 1961

10-00 a.m. SRI M. KALYANASUNDARAM : நான் தவருக இருந்தால் ரொம்ப சந்தோஷப்படுகிறேன். உண்மையைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் கேட்கிறேன். இதுபற்றி தனியாகக் கேட்பதற்கு தனிக் கேள்வி ஒன்றும் தயார் பண்ணிக் கொண்டிருக்கிறேன். ஆனல் இப்போது நான் சொல்ல விரும்பிய விஷயம் தனி நபர்களுடைய கையில் சர்க்கார் தொழில் வளர்ச்சியை விட்டுவிடக் கூடாது என்பதுதான். சர்க்காரே முக்கியமான எல்லாத் தொழில்களையும் எடுத்துப் பொதுத் துறையில் நடத்த வேண்டும் என்பதுதான் என்னுடைய கருத்து. இருக்கிற தொழிலைத் தனியார் கையில் இருந்து எடுத்துவிட வேண்டும் என்று சொல்லவில்லை. இனி ஆரம்பிக்கப் போகிற தொழில்களை தனியார் துறையில் விட்டுவிடவேண்டாம் என்று வலியுறுத்திச் சொல்லவிரும்புகிறேன். "என் கையில் ஒரு கோடி ரூபாய் இருந்தால் பத்து தனிப்பட்ட முதலாளிகளுக்கு பத்து லட்சம், பத்து லட்சம் என்று கொடுத்து பத்துத் தொழில்களை இந்த நாட்டில் ஆரம்பிப்பதற்கு முயற்சி செய்வேன்" என்று தொழில் அமைச்சர் அவர்கள் சொல்லலாம். ஆனல் அந்த முதலாளிகள் என்ன எல்லாப் பணத்தையும் தங்கள் கையில் இருந்து போட்டா தொழில் நடத்துகிருர்கள்? அன்னிய நாட்டில் இருந்து கடன், சர்க்காரில் இருந்து கடன், ஷெயர் மூலமாக பொது மக்களிடம் இருந்து வேறு பணம் என்று ஆளுக்காக தாங்கள் நின்றுகொண்டு பலவகையிலும் பணம் திரட்டித்தான் செய்கிருர்கள். இப்படித் தொழில் நடத்துகின்ற முறை யாரும் அறியாதது அல்ல. சர்க்காரே இப்படிப் பலவகையில் கடன் தொகைகளை எழுப்பி ஏன் தங்களுடைய சொந்தப் பார்வையில் பொதுத்துறையில் தொழில்களை ஆரம்பிக்க முன்வரக்கூடாது? உண்மையில் சோஷலிஸ்டு சர்க்கார் என்பது மக்களிடம் இருந்து வாங்குகிற வரிப் பணத்தைக்கொண்டு நடத்தப்படுவதாக இருக்கக் கூடாது. சர்க்கார் பொதுத் துறையில் நடத்துகின்ற தொழில் களில் இருந்து வருகின்ற வருமானத்தைக்கொண்டே நடை பெறுவதாக இருக்கவேண்டும். தனியார் கைக்கு இந்தத் தொழில்களை எல்லாம் விட்டுவிட்டால் நமக்குப் பயன் இல்லை. சொல்லலாம், நாம் இவர்களுக்கு வரி போட்டுவிடலாமே என்று. முதலாளிகளுக்கு வரி போடுவது என்பது முடியாது. சர்க்காருக்கு ஒரு கணக்கு, தங்களுக்கு ஒரு கணக்கு என்று எல்லா முதலாளிகளுக்கும் இரண்டு கணக்கு நன்ருக வைத்துக்கொள்ளத் தெரியும். இந்த வகையில் சர்க்காரை அவர்கள் ஏமாற்றி விடுவார்கள் என்பது சர்க்கார், அமைச்சர்கள் அறியாதது அல்ல. ஆகவே அவர்களைத் தொழில் நடத்த அனுமதித்து, மக்களிட மிருந்து கொள்ளை லாபம் சம்பாதிக்கவும் அனுமதித்து, கடைசியில் அவர்கள் குறைந்தபட்சமாக சர்க்காருக்குக் கட்டக்கூடிய வரியையும் ஏமாற்றிவிடுவதற்கும் நாம் அனுமதி அளிக்கின்றவாறு ஆகிவிடும். ஆகவே தனியார் துறையை வளரவிடுவது தேசத்தின் நன்மைக்கும், முன்னேற்றத்திற்கும் உகந்தது அல்ல. நாமோ பணம் இல்லை, பணம் இல்லை என்று ஏழை எளிய மக்களின்மீது

24th January 1961] [Sri M. Kalyanasundaram]

போடுகிற வரியைத்தான் அதிகமாக்கிக்கொண்டே போகவேண்டி யிருக்கும். நாடு வேகமாக முன்னேற வேண்டுமென்றால் பொதுத் துறை வளரவேண்டும்.

ஆனால் இன்றையதினம் நமது அரசாங்கம் நேரிடையாக வைக்க உத்தேசித்திருக்கும் சர்ஜிகல் ப்ளாண்ட் போன்றது தவிர நம் ராஜ்ய சர்க்கார் பொறுப்பில் வேறு திட்டம் ஒன்றும் இல்லையென்று சொல்லலாம். ஸ்டீல் ரோலிங் ப்ளாண்ட் வைப்பதாகச் சொல்லப் படுகிறது. அதை நான் வரவேற்கிறேன். இப்படி பல தொழில்கள் பொதுத் துறையில்தான் ஆரம்பிக்கப்படவேண்டும் என்று நான் சொல்வேன். சில குறைகள் ஏற்பட்டால் அவற்றை நிவர்த்திக்க வேண்டுமானால் யோசனை சொல்வேனே தவிர, "சர்க்கார் தொழில் துறையில் தலையிட்டால் இப்படித்தான் குறைகள் ஏற்படும், ஆகவே தனியார் துறைக்கே இத்தொழில்களை விட்டுவிட்டால் சிறந்ததாய் இருக்கும், விசேஷமாக இருக்கும், தனி நபர் சுதந்திரத்தில் கை வைக்காதீர்கள்" என்று சொல்கிறவர்களில் ஒருவன் ஆக மாட்டேன். சர்க்காரே தொழில்களை நடத்த வேண்டும். அதில் குறைகள் இருந்தால் அந்தக் குறைகளை நீக்குவது மக்கள் பொறுப்பு.

குறிப்பாக ஹெவி எலெக்ட்ரிகல் ப்ளான்ட் தமிழகத்தில் ஏற்படுத்த இருப்பது குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். அதோடு என்னுடைய திருச்சி மாவட்டத்தில் ஏற்படுத்த இருப்பது மிகவும் மகிழ்ச்சி. இது இயற்கையாக இருக்க வேண்டியதுதான். அதுவும் கடந்த மூன்று நான்கு வருஷங்களாக சேலம், கோவை போன்ற மாவட்டங்கள் எத்தனை வளர்ச்சி அடைந்து வந்திருக் கிறதோ அவ்வளவு வளர்ச்சி திருச்சி மாவட்டம் அடையவில்லை. ஆகவே அதை திருச்சி ஜில்லாவில் வைக்க இருப்பது நல்லது. அது என்னுடைய தொகுதியாயிற்றே என்று அமைச்சர்கள் யாரும் பயப்படவேண்டாம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்படிக் கொண்டு வருவதைப் பார்த்து பயந்து நீங்கள் தொகுதி மாற்றப் போகிறீர் களா ?

SRI M. KALYANASUNDARAM : நான் ஒன்றும் தொகுதி மாற்றப் போவதில்லை. உங்களுடன் அவ்வகையில் ஒத்துழைக்கத் தயார் என்றுதான் சொல்ல விரும்புகிறேன்.

பொதுவாக மூன்றாவது திட்டத்தில் இன்னும் இருக்கக்கூடிய பல பலவீனமான அம்சங்கள் பற்றிக் குறிப்பிடவேண்டுமானால் நேரம் இல்லை. பின் ஒரு சமயத்தில் சந்தர்ப்பம் கிடைக்கிற போது விரிவாகப் பேசுகிறேன்.

இந்த ஆண்டு தேர்தலுக்கு முந்திய ஆண்டு. ஆகவே அமைச்சர்கள் எதிர்க் கட்சிகளை நடத்துவதிலும், தாங்கள் நடந்து கொள்வதிலும் ஜனநாயகத்திற்கு மதிப்புக் கொடுப்பார்கள் என்று நம்புகிறேன். நேற்று பேசிய திரு. சசிவர்ண தேவர் அவர்கள்

[Sri M. Kalyanasundaram] [24th January 1961

ஆறு மாதத்திற்கு முன்னால் தேர்தலுக்கு முன் அமைச்சர்கள் ராஜிநாமாச் செய்யவேண்டும் என்று சொன்னார்கள். அதுகூட அவ்வளவு முக்கியமல்ல. ராஜிநாமா செய்துவிட்டு பின்னாலே இருந்துகொண்டு பலவிதமான காரியங்களைச் செய்வதைக் காட்டிலும் அதிகாரத்தில் இருந்துகொண்டே செய்தார்கள் என்றால் மக்களிடத்திலாவது எங்களுக்கு எடுத்துச் சொல்ல முடியும். ஆகவே அவர்கள் ராஜிநாமாச் செய்யவேண்டுமா, வேண்டாமா என்பது அல்ல பிரச்சனை. தேர்தல் காலத்தில் ஜனநாயக உரிமைகள் நியாயமாகவும் நேர்மையாகவும் நடைபெறும்படியாகச் செய்யவேண்டும் என்பது என்னுடைய கருத்து. அதுவும் கூட்டங்கள் நடத்துவது என்றால் பலவகையில் போலீசாரின் குறுக்கீடுகள் இருக்கின்றன. இந்த இடத்தில்தான் நடக்கவேண்டும், இன்ன வேளையில்தான் நடக்கவேண்டும், இது 6 மணி முதல் என்றால், அது 9 மணி முதல்தான் நடக்கவேண்டும், ரெக்கார்டு போடக்கூடாது, மைக் போடக்கூடாது என்று இப்படிப் பல தொல்லைகள் கொடுக்கப்படுகின்றன. அதுவும் தொழிலாளிகள் விவசாயிகள் சம்பந்தப்பட்ட வரையில் போலீஸ்காரர்கள் கண் மூடித்தனமாக நடந்துகொள்கிறார்கள். மரியாதை வாரப் கொண்டாடுகிறார்களே தவிர—பொதுமக்களிடம் மரியாதையாக நடந்துகொள்ளவேண்டும் என்று நினைப்பதே இல்லை. மக்களுக்கு போலீஸ் ஸ்டேஷனில் மதிப்பு இல்லை. நிலப் பிரபுக்கள், முதலாளிகள் கை ஓங்கித்தான் இருக்கிறது. நியாயமான விஷயங்களில்கூட அவர்கள் தொழிலாளர்களுக்குச் சாதகமாக இருப்பது இல்லை. தொழிலாளர்கள் மீது பொய் வழக்குகள் அவசியமாகப் போடப்படுகிறது. வழக்கு போடப்படட்டும் அதற்காக பயப்படுகிறவன் அல்ல நான். எனக்கு கோர்ட்டுகளில் அறவே நம்பிக்கை போய்விடவில்லை. செக்ஷன் 107 படி ஒரு வருஷத்திற்கு நன்னடத்தை ஜாமீன் எழுதி வாங்குகிறார்கள். வழக்கு முடிய இரண்டு வருஷம் ஆகிறது. இதற்குள் 26, 30 தாவாக்களுக்கு மேல் இழுத்தடித்து அவர்களது மனதையே ஒடித்துவிடுகிறார்கள். இந்த மாதிரியாகப் போடப்படுகிற பொய் வழக்குகள் எல்லாம் தேர்தல் காலத்தில் எதிர்க்கட்சிகளை ஒடுக்குவதற்கு ஒரு சாதனமாக ஆளும் கட்சியினர் உபயோகிக்கக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன்.

சமீபத்தில் பெரு மழை வெள்ளம் காரணமாக மக்கள் அவதியுற்றார்கள். அவர்களுக்கு நிவாரணம் அளிக்கவேண்டும் என்று எல்லாக் கட்சிகளும் சேர்ந்து—காங்கிரஸ் உள்ளிட்டு—சென்னை நகர மேயருடைய தலைமையில் ஒரு நிவாரணக் கமிட்டி அமைக்கப்பட்டது. நானும் அந்தக் கமிட்டிக்குச் சென்றிருந்தேன். ஆனால் சர்க்கார் அந்தக் கமிட்டி மூலமாக நிவாரண வேலையை அளிப்பதாவது என்று கலெக்டர் மூலமாகவும், இன்னும் தனிப்பட்டவகையிலும் உதவி வேலைகளைச் செய்தார்களே தவிர ஒத்துழைக்கவில்லை. தங்கள் கட்சியின் செல்வாக்கை வளர்த்துக் கொள்வது எப்படி என்றுதான் பார்த்தார்கள். இதில் கட்சிக் கண்ணோட்டம் இருக்கக்கூடாது. மேயர் திராவிட முன்னேற்றக்

24th January 1961] [Sri M. Kalyanasundaram]

கட்சியைச் சேர்ந்தவராக இருக்கலாம். மற்ற எதிர்க்கட்சிகளும் இருக்கின்றன. கோயம்புத்தூரில் கம்யூனிஸ்டு சார்மென் இருக்கலாம். திராவிட கட்சியும் அங்கே ஒத்துழைக்கிறது. திருப்பூரில் சுயேச்சைக்காரர் செயர்மெனுக இருக்கலாம். நகர சபை யாருடைய கையில் இருக்கிறது என்பது அல்ல பிரச்சனை. மக்களுடைய நன்மையைப் பொறுத்தவரையில் கட்சிப் பாகுபாடின்றி நடக்க முன்வரவேண்டும். அதுவும் தேர்தல் சமயத்தில் ஒழுங்கும், நியாயமும், கண்ணியமும் நிலவவேண்டும்.

அதோடுகூட இன்னொரு கோரிக்கை. என் கட்சி சம்பந்தப்பட்டவரையில் ஒரு கோரிக்கை உண்டு. நேற்றைய தினம் அரசியல் கைதிகள் சம்பந்தப்பட்ட கேள்விக்குச் சொன்ன பதிலைப் பார்க்க வேண்டும். கிட்டதட்ட 13 பேர், கம்யூனிஸ்டுக் கட்சியைச சேர்ந்தவர்கள் அரசியல் கைதிகளாக்கப்பட்டிருக்கிறார்கள். "இவர்கள் கொலைக் குற்றம் செய்தவர்கள் அல்லவா" என்றார்கள். அவர்கள் மீது குற்றச்சாட்டு இருப்பது உண்மை. கோர்ட் தண்டித்தது. இதற்காகத் தலை குனிய வேண்டிய அவசியம் இல்லை. 1948-ல் எத்தனை கம்யூனிஸ்டுகள் போலீஸ்காரர்களால் சுட்டுக்கொல்லப்பட்டார்கள்? அதற்காக நாம் என்ன செய்துவிட்டோம்?

Mr. SPEAKER: The hon. Member has already taken about 40 minutes. He should finish his speech soon.

Sri M. KALYANASUNDARAM: Yes, Sir. I shall finish my speech in two or three minutes.

கடந்த 7 ஆண்டுகாலமாக இதைப்பற்றி ஒரு வார்த்தைகூட பேசவில்லை. இதுதான் முதல் தடவையாக பேசுவது. அப்போது நிதி அமைச்சர் அவர்கள் பதில் சொல்லியபோது, "தங்களுடைய தோழர்களுக்காக வாதாடியதைப் பாராட்டுகிறேன். இதைப் பற்றி ஆலோசிப்போம்" என்று சொன்னார்கள். இன்னும் ஆலோசித்துக்கொண்டே இருக்கிறார்கள். 12 வருஷங்களாக சிறைவாசத்தைக் கழித்துவிட்டார்கள். சாதாரண கைதிகளையும் அவர்கள் அதற்குள் விடுதலை செய்திருக்கலாம். அவர்களை விடுதலை செய்யவேண்டியது அவசியம். இன்னும் வைத்திருந்தால் அரசியல் குரோதத்திற்காக வைத்திருப்பதாகுமே தவிர வேறு ஒன்றும் இருக்கமுடியாது. கட்சி அரசியல்தான் நடக்கிறது. அதிகாரத்தில் இருப்பவர்கள் செய்தால் சட்டமும் அமைதியும் பாதுகாப்பதாகப் போய்விடுகிறது. எதிர்க்கட்சியினர் தற்காப்பிற்காக என்று ஏதோ செய்தால் கொலை என்று சொல்லிவிடுகிறார்கள். வேண்டுமென்று திட்டம்போட்டு யாரும் கொலை செய்துவிடவில்லை. கம்யூனிஸ்ட் கட்சி பலாத்காரத்தை நம்பவில்லை. மக்களைத்தான் நம்புகிறது. பார்லிமென்ட்டரி முறையில் அரசியல் சட்டத்தை பயன்படுத்தி இந்த நாட்டில் சோஷியலிசத்தை அமைக்கவேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி திட்டவட்டமாக சொல்லியிருக்கிறது. அதுமாதிரித்தான் நடந்துகொண்டிருக்கிறது. கம்யூனிஸ்ட் கட்சி என்ன பலாத்காரத்தை

[Sri M. Kalyanasundaram] [24th January 1961

செய்துவிட்டது? முன்பு எப்போதோ நடந்ததை வைத்துக் கொண்டு இன்னும் ஒரு கட்சியின்மீது குரோதமாக நடப்பது சரியல்ல. உங்களுக்கு எதிர்க்கட்சியின்மீது மரியாதை இருக்கிறது என்றால் சிறையில் உள்ள அவர்களை இப்போதாவது, இந்தச் சந்தர்ப்பத்தையொட்டியாவது விடுதலை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* SRI R. KRISHNASAMI NAIDU : கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் பிரசங்கத்தின்மீது நன்றி தெரிவிக்கும் இந்தத் தீர்மானத்தை நான் ஆதரிக்கிறேன். கவர்னர் அவர்களுடைய பேருரையிலே நம்முடைய ராஜ்யத்தின் மக்களின் எண்ணங்களைப் பிரதிபலிக்கக்கூடிய பல விஷயங்களையும் குறிப்பிட்டு இருப்பதுபற்றி நான் பாராட்டுகிறேன். விவசாயத் துறையில் மிகவும் முன்னேற்றகரமான பல நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டு இருப்பதைப்பற்றி நான் அரசாங்கத்தை மிகவும் பாராட்டுகிறேன். விவசாயத்துறையிலே ரசாயன உரம் சரியான அளவில் ஜில்லாக்களில் வினியோகிக்கப்படவில்லை என்ற குறையைப் பல அங்கத்தினர்கள் கூறினார்கள். அவர்கள் சொல்வது உண்மைதான். சென்ற வருஷத்தைப்போல் இந்த வருஷத்திலே விவசாய உற்பத்தியைப் பெருக்கவேண்டிய திட்டத்தின் அடிப்படையில் காரியங்கள் நிகழ்ந்துவரும்போது ரசாயன உரம் பற்றாக்குறையாக சென்ற வருஷத்தைவிட குறிப்பாக இந்த வருஷம் வினியோகிக்கப்பட்டிருப்பது வருந்தத்தக்கது. என்றாலும் கூட இதற்குக் காரணம் பல இருக்கின்றன என்பதை நான் சொல்லித் தெரிந்துகொள்ளவேண்டிய அவசியம் இல்லை. சென்ற வருஷத்தைப் போல் இந்த வருஷத்திலும் வரக்கூடிய உரம் இருக்கிறது என்பது தெரிந்திருக்கிறது. ஆனால் அது ஏனோ வந்து சேரவில்லை. கிடைத்த அளவில் சரிவர இந்த வருஷத்தில் வினியோகப்படுத்தியதுபற்றி அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன்.

குறிப்பாக ராமநாதபுரம் ஜில்லாவிற்கு இந்த வருஷ முதலில் பல மக்களுக்கு 1,200 டன் ரசாயன உரம் ஒதுக்கப்பட்டிருந்தும் 400 டன் உரம்தான் இந்த வருஷம் கிடைத்திருக்கிறது. ஆனால் விசாரித்ததில் கடல் கொந்தளிப்பினால் கப்பல் வரத் தாமதம் ஏற்பட்டு துறைமுகங்களிலே ஏற்றிச் செல்லாததினால் ஏற்பட்ட தாமதம் காரணமாக 400 டன்னில் ஒரு பகுதிக்கு ஒதுக்கப்பட்ட ரசாயன உரம் காலாகாலத்தில் கிடைப்பதற்கு வழியின்றி 250 டன்னோடு நின்றுவிட்டது. ஆகையால் சரிவர விவசாயிகளுக்கு கொடுக்கமுடியாத நிலைமை ஏற்பட்டது. என்றாலும் ஒரு வகையில் இந்த வருஷத்தில் ரசாயன உரம் காலாகாலத்தில் கிடைக்குமா என்று சோதனை ஏற்பட்டாலும்கூட என் பகுதிக்கு சென்ற வருஷம் ரசாயன உரம் போட்டு பயிர்கள் எவ்வளவு நன்றாக இருந்ததோ அதைவிட இந்த வருஷம் ரசாயன உரம் அதிகமாக உபயோகப்படுத்த ஏற்பாடு செய்யமுடியாவிட்டாலும் மகசூல்கள் மிகவும் செழிப்பாக இருந்துகொண்டு வருகிறது என்பதை ஆறுதலாக விவசாயிகள் கொள்கிறோம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

24th January 1961] [Sri R. Krishnasami Naidu]

இந்த வருஷம் ரசாயன உரம் கூட்டுறவு சங்கங்கள் மூலமாக வினியோகிக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். ஒவ்வொரு கூட்டுறவு சங்கமும் அதன் அதன் அதிகார எல்லையில் எவ்வளவு நெல் சாகுபடி செய்யப்பட்டிருக்கிறது என்பதை கணக்கெடுத்துக் கொண்டு அதற்குத் தகுந்தபடி அந்தந்த சங்கத்திற்கு எவ்வளவு உரம் ஒதுக்கவேண்டுமோ அவ்வாறு ஒதுக்கிக் கொடுத்து அந்த நிர்வாகிகள் மூலமாக விவசாயிகளுக்கு அந்த உரத்தையும் வினியோகம் செய்யவேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் செய்யப்பட்டன. எவ்வாறு அந்த வினியோகம் நடக்கிறது என்று உன்னிப்பாக தொடர்பு கொண்டு கவனித்தேன். நியாயமான முறையில் வினியோகம் நடைபெற்றிருக்கிறதென்று தெரிந்துகொண்டேன். பொதுமக்களும் பஞ்சாயத்துக்களும் கூட்டுறவு சங்கங்களின் தொடர்போடு செயல்பட்டு ஒத்துழைத்தால் நல்லவிதமாக நிர்வாகம் நடைபெறும் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட சோதனைகளிலேகூட இந்த சங்கங்கள் வினியோகிக்கும் முறையில் சரிவர நடத்திக்கொண்டிருக்கின்றன என்று தெரிகிறது. விவசாயத்துறையிலே இப்பொழுது ஏற்பட்டுள்ள அபிவிருத்திக்கு சோஷியலிச முறையில் முன்னேற்றகரமான காரியங்கள் அரசாங்கம் செய்துக்கொண்டிருக்கும்போது அதனுடைய பயனை யார் அனுபவிக்கிறார்கள் என்ற சந்தேகம்கூட இங்கு எழுந்திருக்கிறது. ஜில்லாவிலே நல்லமுறையில் நம்முடைய நிர்வாகம் நடைபெற்று பொதுமக்கள் முக்கியமாக உழைப்பாளர்கள் முன்னேறுவதற்கு வாய்ப்பு அளித்திருக்காவிட்டால் விவசாயத்துறையில் கிராமங்களில் இவ்வளவு நல்ல முறையில் ஒரு அபிவிருத்தி ஏற்பட்டிருக்காது. ஏக்கர் ஒன்றுக்கு சில படி தானியங்கள், சில மரக்கால் தானியங்கள் விளையக்கூடிய நிலங்களில் எல்லாம் அதிக விளைச்சல் கண்டிருப்பது எதனால் என்று ஆராய்ந்து பார்க்க வேண்டும். பல கிராமங்களில் எவ்வாறு விவசாய நிலங்கள் எப்படி நல்ல வகையிலே உரம் போட்டு பயிர் செய்யப்படுகின்றன? நிலத்தின் தரம் எவ்வாறு உயர்ந்திருக்கிறது? பல வருஷங்களுக்கு முன்னால் இதே நிலத்தில் எப்படி சாகுபடி செய்யப்பட்டு வந்ததென்பதையும், இப்பொழுது அந்த நிலத்தினுடைய தரம் உயர்ந்து அதிகமாக உற்பத்தியை கொடுத்து வருவதையும் நாம் காண்கிறோம். அப்படி இருக்க எந்தக் கண்ணோட்டத்துடன் பார்க்கிறார்கள் என்று புரியவில்லை. இதை நன்றாக சிந்தித்துப்பார்க்கவேண்டும். சில வருஷங்களுக்கு முன் எல்லா கிராமப் புறங்களிலும் நிலங்களை வைத்துக்கொண்டிருந்தவன் கடனாளியாக இருந்து விற்க முன்வருவானானால் அதை வாங்குவதற்கு ஒருவரும் இருக்கமாட்டார்கள். இன்றையதினம் ஒருவன் நிலத்தை விற்கவேண்டுமென்று எண்ணினால் பலர் போட்டிபோட்டுக்கொண்டு வாங்கும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது. கிராமப் புறங்களில் நிலங்களுக்கு அதிக கிராக்கி ஏற்பட்டிருப்பதை சீர்தூக்கிப் பார்க்கவேண்டும். நிலத்தை ஒருவன் விற்கவேண்டுமென்றால் பலர் போட்டிபோட்டுக்கொண்டு அந்த நிலத்தை வாங்கவந்தால் அது எதை காட்டுகிறது. நிலத்தின் மதிப்பு உயர்ந்துவருவதற்குக் காரணம் விவசாயத்திலே

மக்கள் மனம் சினிமா மேல்தான் சென்று கொண்டிருக்கிறது. ஆகவே, சினிமா கலை நல்ல முறையில் உருவாக வேண்டும். சினிமா காட்சிகள் மக்கள் மனதை அதிசீக்கிரம் வசீகரிக்கக் கூடிய கலையாக இருந்து கொண்டிருக்கிறது. அந்தக் கலை நல்ல முறையில் அமையாவிட்டால் அது நாட்டிற்கு பெரும் பாதகத்தை உண்டு பண்ணும். இன்று சினிமா : காட்சிகள் ஒரு நாளைக்கு எத்தனையோ நடக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இரவு 9, 10 மணிக்கு மேல் சினிமா காட்சிகள் நடந்து வருவதைத் தடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். சிறிய நகரங்களில்கூட எந்த நேரத்திலும் ஒலிப் பெருக்கி மூலம் சினிமா பாட்டுக்களும், நமது பண்பை கெடுத்துவிடக்கூடிய பாட்டுக்கள் பதிவு வைத்த ரிக்கார்ட் மூலம் வைக்கப்படுகின்றன. ஹைஸ்கூல் மாணவர்களும், கல்லூரி மாணவர்களும் வீட்டில் இருக்கும்போதுகூட தங்கள் மனதை பாடங்களில் செலுத்தாமல் பக்கத்தில் ஒலிக்கக்கூடிய சினிமாப் பாட்டுகளில்தான் கவனம் செலுத்துகிறார்கள். ஆகவே, மாணவர்கள் குறிப்பாக, தங்கள் மனதை நல்ல காரியங் களில் செலுத்துவதற்கு, நல்ல முறையில் சிந்திக்கக்கூடிய வகையில், மனதை நல்ல முறையில் செலுத்துவதற்கு, அலங் கோலமான விதத்தில் மனதை செலுத்தவொட்டாமல், அப்படி கெட்ட எண்ணங்கள் மனதில் ஏற்படாதவாறு அவற்றை அகற்று வதற்கு வேண்டிய ஏற்பாட்டை சர்க்கார் கைக்கொள்ளவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். சோஷியலிஸ சமுதாய அமைப்பின் மூலம் நாட்டுக்கு ஏற்படுகிற நன்மைகள் துரிதமாக ஏற்படவேண்டுமென்றால் மக்களின் உள்ளம் நலம் பெறவேண்டும். நல்ல உணர்ச்சி மனதில் நிலவவேண்டும். அப்படி மக்களின் மனதில் நல்ல உணர்ச்சிகள் உருவாகவில்லை என்றால் எத்தனை திட்டங்கள் வகுத்தாலும் கூட அதன் பலனை அனுபவிக்க முடியாது என்ற நிலைதான் ஏற்படுமென்று சொல்லிக்கொண்டு அதற்கு ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI GOMATHISANKARA DIKSHITAR : கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் உரைக்கு நன்றி தெரி விக்கும் இத்தீர்மானத்தை ஆதரித்து நான் ஒரு சில வார்த்தை கள் சொல்ல விரும்புகிறேன். கவர்னர் அவர்கள் உரையில், நம் ராஜ்யத்தில் சுபிட்ச வாழ்க்கைக்கு வேண்டிய அம்சங்கள் எல்லாம் அடங்கியிருப்பது கண்டு நாம் மகிழ்ச்சியடைய கடமைப்பட்டி ருக்கிறோம். அடிமைப்பட்டுக் கிடந்த இந்த நாடு, மஹாத்மா காந்தியடிகளின் ஆசியால் சுதந்திரம் பெற்று குடியரசாக திகழும் இத்தருணத்தில் நம்மை ஆண்டுகொண்டிருந்த அரச வம்சத்தோடு சேர்ந்த எலிசபெத் ராணி அவர்கள் இந்த குடி யரசு நாட்டிற்கு சிநேகத் தன்மையோடு விஜயம் செய்வது கண்டு நமது இந்திய மக்கள் அவர்களுக்கு மனமுவந்த நல்வரவு அளிப் பதும் சரித்திர சம்பந்தமான விஷயமாகும். உலகத்திலேயே சிறந்த ஜனநாயக நாடாக விளங்கும் இந்நாட்டை பிரிட்டிஷ் ராணியார் வந்து பார்ப்பதும், அவர்களுக்கு நாம் நமது நட்பைத்

24th January 1961] [Sri Gomathisankara Dikshitar]

தெரிவிப்பதும் சரித்திரத்தில் ஒரு முக்கிய விஷயமாகும். கவர்னர் அவர்கள் உரையில் தூத்துக்குடி துறைமுக அபிவிருத்தித் திட்டம் இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட இருப்பது குறித்து, அதனுல் நம் ராஜ்ய வியாபாரம், தொழில் இவைகள் வளர்வதற்குரிய ஒரு நிலை ஏற்படுவது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். நாட்டில் மழை பெய்து அதன் மூலம் நீர்நிலைகள் நன்கு நிரம்பி விவசாயத்திற்கு மிகவும் நன்மை பயக்கக்கூடிய நிலையில் இருந்தும் அம்மழை காரணமாக பலவிடங்களில் மக்கள் கஷ்டப்படும் நிலையும் ஏற்பட்டிருக்கிறது. திருநெல்வேலியில் என் தொகுதியில் தாமிரபரணியில் அதிக வெள்ளம் ஏற்பட்ட காரணத்தால், பல வீடுகள் இடிந்து விழுந்தும், சிலர் உயிர் இழந்தும் கஷ்டப்படும் நிலை ஏற்பட்டு விட்டது. அரசாங்கம் அவர்களுக்கு வேண்டிய நிவாரணம் அளித்து வருகிருர்கள். மணிமுத்தார், பாபநாசம் இவற்றில் அணை லெவலுக்குமேல் மழைத் தண்ணீர் பெருகுவதன் மூலம் அந்த அணைகளைக் காப்பதற்கு ஏராளமான தண்ணீரை வெளியில் திறந்து விடக்கூடிய ஒரு நிலை தாமிரபரணி வெள்ளத்திற்குக் காரணமாக ஏற்பட்டு விட்டது. சுமார் 30 வருஷ காலத்தில் இம்மாதிரி வெள்ளம் தோன்றியதில்லை. அதைத் தடுப்பதற்கு பாபநாசம் அணைக்குப் பக்கத்தில் சேர்வையாறு என்ற ஒரு ஆறு இருக்கிறது. அதில் சிறிய அணைக்கட்டு ஒன்றை கட்டி அதன் மூலமாக அதிகமான அளவில் தண்ணீரை பாபநாசம் அணையில் தங்கவிடாமல் அதைத் திறந்து விட்டுவிட்டால் இம்மாதிரி வெள்ளத்தினுல் எந்தவிதமான சேதமும் எங்களுக்கு ஏற்படாது 10-30 p.m. என்பதை நான் இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கிறேன். சேர்வையாறு விஷயமாக ஏற்கனவே பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. இதில் அதிகமான பணம் செலவழிக்கத் தேவையில்லை. அதோடு இது பாசனத்திற்கும் உதவியாக இருக்கும். அதேபோல் வருகின்ற மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அம்பாசமுத்திரம் தாலூகாவில், கடனநதி அணைக்கட்டுத் திட்டத்தையும், ராமநதி அணைக்கட்டுத் திட்டத்தையும் எடுத்து வேலைகள் நடத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதன் மூலமாக சுமார் ஏழாயிரம் ஏக்கர்கள் பாசன வசதி பெறும். ஆகவே இந்தத் திட்டத்தை கூடிய சீக்கிரத்தில் எடுத்துக்கொள்ளவேண்டும் என்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கோடிக் கணக்கான ரூபாய் செலவழித்து உணவு உற்பத்தியை பெருக்குவதற்கும், தொழில் வளத்தை பெருக்குவதற்கும் திட்டம் போடப்பட்டிருக்கிறது. இது வெற்றியுடன் நடைபெறுவதற்கு அரசியல் கட்சிகள் தங்களுக்குள் எந்தவிதமான வேறுபாடுகள் இருந்த போதிலும் இதில் எல்லோரும் ஒத்துழைக்கவேண்டும் என்று நான் எல்லா அரசியல் கட்சிகளையும் கேட்டுக்கொள்கிறேன்.

நமது நாட்டில் சர்க்கரை (சீனி) உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் சங்கரன்கோவில், ஸ்ரீவில்லிபுத்தூர் போன்ற இடங்களில் சர்க்கரை ஆலைகளை கூட்டுறவு

முறையில் ஆரம்பிப்பதற்கு வேண்டிய முயற்சிகள் நடந்து வருகின்றன. அதன் மூலமாக நமக்கு வேண்டிய சர்க்கரையை உற்பத்தி செய்து கொள்ளலாம். இதன்மூலம் நமக்கு இருந்து வருகின்ற பற்றுக்குறையும் போகும் என்று நம்புகிறேன்.

அதேபோன்று தொழில் வளம் பெருகுவதற்கான முறையில் மணிமுத்தாறு—பாபநாசம் அணைக்கட்டுகளில் பக்கத்தில் ஒரு பேப்பர் மில்லை ஆரம்பித்து வேலை நடத்துவதற்கும் அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதோடு விக்கிரமசிங்கபுரம் என்ற இடத்தில் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வசித்து வருகிறார்கள். அந்த இடத்தில் குடிதண்ணீர் வசதியில்லாத காரணத்தால் பலவிதமான தொத்துவியாதிகள் பரவுகின்றன. அந்த ஜில்லாவுக்கு தொத்து வியாதிகள் பரவுவதற்கு காரணமாயிருக்கின்ற இடமாகிய விக்கிரமசிங்கபுரத்தில் குடிதண்ணீர் வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று பல ஆண்டுகளாகக் கேட்டுக்கொண்டு வருகிறோம். இதுவரையிலும் எந்தவிதமான வசதியும் செய்து கொடுக்கப்படவில்லை. ஆகவே கூடிய சீக்கிரத்தில் விக்கிரமசிங்க புரத்திலும், தாமிரபாணி ஆறு கரையோரமாக, அம்பாசமுத்திரம், கல்லிடைக்குறிச்சி, சேர்மாதேவி போன்ற பெரிய பஞ்சாயத்து நகரங்களிலும் இந்த குடிதண்ணீர் வசதி திட்டத்தை கொண்டு வருவதற்கு, அதிலும் குறிப்பாக இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்து அமுலுக்குக் கொண்டு வருவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் என்று நான் அரசாங் கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். இது மிகவும் முக்கியமான விஷயமாகும். திருநெல்வேலி ஜில்லாவை எடுத்துக்கொண்டால் சுகாதார அதிகாரிகள் எவ்வளவோ தடுப்பு முறைகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அதன் காரணமாக அதிகமான அளவில் தொத்துவியாதிகள் வராமல் இருக்கின்றன. ஆனால் இம்மாதிரிப் பட்ட தொத்துவியாதிகள் வந்துவிட்டால் ஒரேயடியாக ஆயிரக் கணக்கான பேர்களைக் கொண்டு போய்விடும். ஆகவே இதைத் தடுக்கவேண்டுமானால் பெரிய பஞ்சாயத்துகளிலும், நகரங் களிலும் உடனடியாக குடிதண்ணீர் வசதியை விரைவில் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டியது மிகவும் முக்கியமாகும். இதில் அரசாங்கம் தக்க கவனம் எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதுமாத்திரமல்ல, பலவிதமான தொழில் எஸ்டேட்டுகள், சுமார் 20 இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டுகள் நிர்மாணிக்கப் போவதாக கவர்னர் பெருமான் அவர்கள் தனது உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அத்தகைய இண்டஸ்ட்ரியல் எஸ்டேட் ஒன்றை என்னுடைய தொகுதியாகிய அம்பா சமுத்திரம் தாலூகாவில் ஏற்படுத்தவேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். மேலும், மணிமுத்தாறு அணை கட்டி முடித்த பின்னால் அங்கு ஏராளமாக உபயோகப் படுத்தப்பட்ட பல வீடுகள் இருக்கின்றன. அதோடு அங்கு லைட் வசதி, தண்ணீர் வசதி போன்ற எல்லா வசதிகளும் ஏராளமாய் இருக்கின்றன. அந்த இடத்தில் ஒரு தொழில் ஸ்தாபனத்தை ஏற் படுத்தினால் அதன் மூலமாக ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள்

24th January 1961] [Sri Gomathisankara Dikshitar]

வேலை வாய்ப்பு பெறுவதற்கு வசதி ஏற்படும். இப்போது அங்கே அம்பர் சர்க்கா இன்ஸ்டிட்யூட் ஒன்று நடத்தப்பட்டு வருகிறது. மேலும் எங்கள் தாலுகாவைப் பொறுத்தவரை கைத்தறி நெசவாளர்கள் அதிகமாக இருப்பதின் காரணமாக அங்கே சாயம் காய்ச்சக்கூடிய ஒரு தொழில் ஸ்தாபனத்தை நிறுவி அதன் மூலம் கைத்தறி நெசவாளர்களுக்கு உதவி கிடைக்கும் வாய்ப்பை அளிக்கவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். அது மாத்திரமல்ல, கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையில் கல்வி முன்னேற்றத்திற்காக, வரப்போகும் ஆண்டில் எல்லோருக்கும் அதாவது, 6 வயது முதல் 11 வயது வரை உள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் கட்டாயக் கல்வி வசதி அளிக்கப் படுவதைப்பற்றி குறிப்பிட்டிருப்பது மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். ஏனென்று கேட்டால், நம் நாட்டில் கல்வி பெறாத குழந்தைகளே இருக்கக்கூடாது என்கிற நோக்கத்தோடு கட்டாய இலவச கல்வித் திட்டம் கொண்டுவரப்படுவது மிகவும் போற்றுதற்குரியதாகும். அதை எல்லாக் குழந்தைகளும் பயன் படுத்திக்கொள்ளக்கூடிய முறையில் எல்லாவிதமான பஞ்சாயத்து களும், மற்றும் பொதுஜன ஊழியர்களும், பொதுமக்களும் இதில் சிரத்தையோடு ஒத்துழைக்க முன் வந்தால், நம் ராஜ்யத்தில் கல்வி முன்னேற்றம் ஏற்படும் என்பதில் சந்தேகமில்லை. இதில் முக்கிய மாக கவனம் எடுத்துக்கொண்டு இந்தத் திட்டம் வெற்றியாக நடந்தேறுவதற்கு எல்லோரும் ஒத்துழைக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

என்னுடைய தொகுதியில் இருக்கக்கூடிய சேர்மாதேவி என்கிற இடம் முக்கியமாக ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர் வசிக்கக் கூடிய இடம். திருநெல்வேலிக்கும் அம்பாசமுத்திரத்திற்கும் மத்தியில் இருக்கக்கூடிய இடம். இந்த இடத்திலிருந்து திருநெல் வேலிக்குச் செல்லவேண்டுமானால் சுமார் 21 மைல் தூரமிருக் கிறது. இந்த தூரத்தை குறைக்க சுலபமாக, சேர்மாதேவியின் பக்கத்தில் தாமிரபரணி ஆற்றில் ஒரு பாலத்தைக் கட்டினால் 15 மைல் தூரத்தில் திருநெல்வேலிக்குப் போகலாம். ஆகவே இந்த பாலத்தையும் கட்டிக்கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். பொதுவாக விவசாயிகளுக்கு வேண்டிய உரம் கிடைப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டுதான் வந்து கொண்டிருக்கிறார்கள். எங்களுடைய ஜில்லா கலெக்டர் இந்தக் காலத்தில் விவசாயிகளுக்கு உரம் கிடைப்பதற்கு நல்ல முறையிலே ஏற்பாடு செய்திருப்பதைப் பாராட்டாமல் இருக்க முடியாது. ஆனாலும் கிராமத் தலைவர்களுடைய பயிற்சி முகாம் பல இடங்களில் நடத்தப்பட்டு, அதன் மூலம் விவசாயிகள் விஞ்ஞான முறையில் விவசாயம் செய்ய முற்படும்போது மிகவும் தேவையாக இருப்பது உரம். உரம் பற்றாக்குறையாக இருப்பதால் அவர்களுக்கு வேண்டிய அளவு உரம் கிடைப்பதில்லை. அதனால் விவசாயத்தை விருத்தி செய்து உணவு உற்பத்தியை அதிகரிக்க முடியவில்லை. அத்தகைய குறைகளை நீக்க நெய் வேலியில் இப்போது ஆரம்பிக்கப் போகும் உரத் தொழிற்சாலையில்

அதிக அளவு உரம் உற்பத்தி செய்து அதன் மூலம் விவசாயிகளுக்கு உரம் இல்லாக் குறையை நீக்க ஜரூராக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

அது மாத்திரமல்ல. இப்போது விவசாயிகள் அதிகமாக உற்பத்தி செய்வதில் கவனம் செலுத்துகின்றூர்கள். அவர்களுக்கு எல்லாவிதமான வசதிகளும் அளிக்கப்பட்டு வருகின்றது. பஞ்சாயத்து கவுன்ஸில் மூலமாக உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டிய முயற்சி நடைபெற்று வருகின்றது. பஞ்சாயத்து கவுன்ஸிலின் வேலைகளில் இத்தகைய நிர்மாண வேலைகள் இருப்பதால் இதையெல்லாம் பஞ்சாயத்தார்கள் கவனித்து 1958-ம் வருஷத்து பஞ்சாயத்து ஆக்டை அமுலுக்குக் கொண்டுவருகின்ற ஊழியர்களும் உத்தியோகஸ்தர்களும் தங்களுடைய கடமையை நன்குணர்ந்து கிராம மக்களுக்குச் சேவை செய்யக்கூடிய மனப்பான்மையில், பஞ்சாயத்து ஆக்ட்டின் நன்மையை கிராம மக்கள் பெற்று, கிராம ராஜ்யத்திற்கு அடிகோலியாக இருக்கக்கூடிய முறையில் சேவையையும் ஒத்துழைப்பையும் அளித்து பஞ்சாயத்து ஆக்ட் வெற்றி பெறும்படி செய்யவேண்டுமென்று பஞ்சாயத்து அதிகாரிகளை முக்கியமாகக் கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால் பஞ்சாயத்து ஆக்ட் வெற்றிபெறவேண்டுமானுல் பஞ்சாயத்து பிரெஸிடெண்ட்களும், பஞ்சாயத்து மெம்பர்களும், பஞ்சாயத்து அதிகாரிகளும் ஒன்றுபட்டு வேலை செய்து அந்தச் சட்டத்தின் நல்ல அம்சங்களை மக்கள் பெறுவதற்கு பாடுபடக் கடமைப்பட்டிருக்கிறூர்கள். இப்போது கிராம ராஜ்யத்திற்கு அடிப்படையாக பஞ்சாயத்து கவுன்ஸில் ஏற்படுவதன் காரணமாக பஞ்சாயத்து ஆக்ட் வெற்றியுடன் நடைபெற அதிகாரிகளும், பஞ்சாயத்து பிரெஸிடெண்ட்களும், மெம்பர்களும் ஒத்துழைத்து வெற்றிபெறச் செய்ய முன்வரவேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கின்றேன்.

* **Sri D. SUBRAMANIA RAJAKUMAR :** கனம் சபாநாயகர் அவர்களே, இன்று மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் அவர்களின் உரையின் மீதான விவாதத்திலே என்னுடைய மாவட்டத்திலுள்ள குறைகளை மட்டும் சர்க்காருக்கு எடுத்துக் கூறுகிற முறையில் பேசுவதற்கு முன் வந்திருக்கிறேன்.

மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையிலே பல திட்டங்களைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தபோதிலும், முக்கியமாக இந்த மாகாணத்திலே மிகவும் பின் தங்கிய மாவட்டமாகிய கிழக்கு ராமநாதபுரத்திற்கு எந்தவிதமான திட்டமும் கூறப்படாதது குறித்து மிகவும் வருந்த வேண்டியதாக இருக்கிறது. அப்படிப் பார்க்கும்போது முக்கியமான ஒரு திட்டம் இடுக்கி என்ற அப்பர் பெரியார் திட்டம். இந்தத் திட்டத்தை மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்ப்பார்கள், அதற்கான வேலைகள் நடைபெறும் என்று அப்பகுதி மக்கள் மிகவும் ஆசையுடன் இருந்தார்கள். ஆனுல் கவர்னர் பெருமானுடைய உரையிலே

அதைப் பற்றி காணப்படாதது அவர்களுக்கு பெருத்த ஏமாற்றத்தை அளிக்கக் கூடியதாக இருக்கிறது. இந்த இடுக்கி என்ற அப்பர் பெரியார் திட்டத்தை எடுத்துக்கொள்ளாததற்கு முக்கியமாக கேரள மாகாண முதன் மந்திரி பெரியாற்றின் தண்ணீரை இந்த மாகாணத்திற்கு விடமுடியாது என்று கூறியதாக இருக்கலாமோ என்று கருத வேண்டியிருக்கிறது. ஆனால் கேரள மாகாண முதன் மந்திரி அவர்கள் இந்த மாகாணத்திற்கு பெரியாற்றின் உபரித் தண்ணீரில் ஒரு சொட்டுக்கூட விடமுடியாது என்று கூறுவதற்கு எந்தவிதமான நியாயமும் கிடையாது என்று எடுத்துக் கூற ஆசைப்படுகிறேன். ஏனெனில் பெரியாற்றில் கள்ளாறு, ஆனைமலையாறு, நீராறு போன்ற ஆறுகள் கலக்கின்றன. மேலும் பழைய பெரியாறு ஸர்ப்ளஸ் வாட்டர் ஒப்பந்தப்படி இந்த மாகாணத்திற்கு தண்ணீர் விடவேண்டியது முக்கியம் பெரியாறை ஒரு இண்டர்-ஸ்டேட் ரிவராக எடுத்துக்கொள்ள வேண்டும். இதை மனதிலே வைத்துக்கொண்டு சென்னை சர்க்கார் கேரள சர்க்காருடன் பேசி இந்த இடுக்கி என்ற அப்பர் பெரியார் திட்டத்தை இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க முன் வர வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். அதோடு பாம்பார் திட்டம் கைவிடப்பட்டதாகத் தெரிகிறது. இதைப்போல கவனக் குறைவால் கேரள சர்க்காருக்கு விட்டு விடாதபடி சென்னை சர்க்கார் முயற்சி செய்து உடனடியாகச் செய்யவேண்டுமென்று அம்மாவட்ட மக்கள் மிகவும் ஆசைப்படுகிறார்கள். இன்னும் முக்கியமான திட்டம் சேதுசமுத்திரத் திட்டம். அதையும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்து அம்மாவட்ட மக்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்று மிகவும் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். ஏனெனில் தொடர்ந்து பல வருஷங்களாக புயலினாலும், பருவ மழை தவறியதாலும், இன்னும் காலம் தவறி அதிக மழை பெய்ததாலும் அந்தப் பகுதியில் விவசாயம் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது. அம்மாவட்டம் ஒரு பஞ்ச நாடாகக் காட்சியளிக்கிறது. அங்குள்ள விவசாயிகள் விவசாயத்தொழிலில் அவநம்பிக்கை கொண்டு அடுத்த மாவட்டங்களுக்கோ அல்லது அடுத்த தேசமாகிய இலங்கைக்கோ சென்று மிகவும் கேவலமான நிலையில் அவதிப்படுகிறார்கள். இதை சர்க்காரும், அமைச்சர்களும் நன்றாக உணர்வார்கள். இதையெல்லாம் மனதில் வைத்து இந்த மாவட்டத்தின் இரண்டு திட்டங்களை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்ப்பார்கள் என்று நம்புகிறேன். அவைகளைச் சேர்க்கவேண்டுமென்று மீண்டும் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்.

என்னுடைய தொகுதியைப் பொருத்த வரையில் சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் பல இருந்தும் அவைகள் இதுவரையில் கவனிக்கப்படவில்லை. முக்கியமாக ஈச்சனோடை, முடிக்கொண்டான், அதினிப்பட்டி போன்ற திட்டங்கள் ரொம்ப காலமாக இருந்துகொண்டிருக்கின்றன. சரியான முறையில் வாய்க்கால்கள் வெட்டப்படாத காரணத்தினாலும், கண்மாய்கள்

மராமத்து செய்யப்படாத காரணத்திலும் ரொம்பவும் பாதிக்கப் பட்டிருக்கின்றன. அவைகளை உடனடியாகச் செய்யவேண்டு மென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

ஆடுத்தபடியாக திரு. அருள்தாஸ் ரிப்போர்ட்டிலே காவிரி-மேட்டூர் ப்ராஜெக்ட் தண்ணீரை திருவாடானை, திருப்பத்தூர் இந்த இரண்டு தாலுக்காக்களுக்கும் கொண்டு வாலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதுவரையிலும் எந்தவிதமான பரி சிலனையும் செய்யாமல் இருந்து வருகிறது. தனிப்பட்ட அதிகாரியைப் போட்டு அதைப் பரிசிலனை செய்ய அதற்கு வேண்டியவைகளைச் செய்தால் அந்தப் பகுதியில் விவசாயத் தொழில் விருத்தியடையும் என்று கூறிக்கொள்ள ஆசைப்படு கிறேன்.

என்னுடைய தொகுதியிலே கண்மாய்கள் மராமத்துக்கு லட்சக் கணக்கிலே சாங்ஷன் ஆகியிருக்கிறது. ஆனாலும் இது வரையில் எந்தவிதமான மராமத்தும் செய்யப்படவில்லை. தனிப்பட்ட அரசியல் செல்வாக்கு பெற்றவர்களுடைய தலையீட்டினால்தான் பல வேலைகள் நடக்க முடியாமல் இருக்கின்றன. தனிப்பட்டவர் களுடைய சிபார்சுகளாலும், தனிப்பட்டவர்களுடைய செல்வாக் கினாலும் பல வேலைகளை நடத்த முடியாமல் இருக்கிறது.

ஆதலால் இந்த கண்மாய் மராமத்து வேலைகள் நல்லமுறை யிலே நடக்க வேண்டுமானால் குறிப்பிட்ட கண்ட்ராக்டர்களுக்கு மட்டும் கொடுக்காமல், டெண்டர் மூலம் விடவேண்டும். சில குறிப்பிட்ட கண்ட்ராக்டர்கள் நாமிநேஷன்கள் போட்டு, பல கண் மாய் வேலைகளை அவர்கள் எடுத்துக்கொண்டு, அவைகளைச் செய்ய முடியாமல் இருந்து கொண்டிருப்பதைக் காணலாம். ஆதலால் இந்த சர்க்கார் ஒரு கிராமத்திலே ஒரு கண்மாய் ரிப்பேர் செய்ய வேண்டுமானால், அங்குள்ள ஒரு பெரிய பட்டாதார் அந்த வேலையை தான் எடுத்துக்கொண்டு செய்வதற்கு முன்வந்தால், அந்த வேலையை அவருக்கே விட்டுவிட வேண்டும். இவ்விஷயத் திலே பல போட்டிகள் இருந்தால், அதை எந்த விதத்திலும் சிபார்சு செய்யாமல் டெண்டர்க்கு விட வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, சமீபத்திலே பேய் மழை பெய்ததின் காரணத்தால் சிவகங்கை தாலுக்காவிலே, கல்லல் பிர்க்காவிலே பயிர்கள் எல்லாம் சேதமடைந்து விட்டது. ஆனால் இந்த சந்தர்ப்பத்திலே அங்கு கெடுபிடியாக வரி வசூல் பாக்கிகளை வசூலிக்க நடவடிக் கைகள் எடுக்கப்பட்டு வருகிறது. அத்துடன் தக்காவி லோன், மற்றும் புயல் லோன் போன்ற கடன் பாக்கிகளையும் உடனடியாக கொடுக்க வேண்டுமென்று நிர்பந்திக்கப்படுகிறது. இந்த சமயத் திலே அம்மாதிரியான வரிகளையெல்லாம், கடன் பாக்கிகளையெல் லாம் வசூல் செய்வது மிகவும் அநியாயமான காரியம் என்று கூறிக் கொள்ள ஆசைப்படுகிறேன். எஸ்டேட் மானேஜர்கள் மூலம் மிகவும் அமைதியான முறையிலே, விவசாயிகளுக்கு கஷ்டம்

24th January 1961] [Sri D. Subramania Rajakumar]

ஏற்படாத முறையிலே தற்போது பழைய கடன் பாக்கிகளை யெல்லாம் கேட்காமல், இருபசலி வரி வசூல் பாக்கியை மட்டும் வசூல் செய்யும்படியாக மிகவும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்.

மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் அவர்கள் உரையிலே புதியதாக தென்னகத்தில் ரயில் பாதைகள் போடப்படுமென்று கூறியிருப்பது மிகவும் சந்தோஷகரமான ஒரு விஷயமாகும். இந்த சந்தர்ப்பத்திலே பழைய ஒரு திட்டத்தின்படி கிழக்கு ராம நாதபுரத்திலே, அருள்தாஸ் ரிப்போர்டில் குறிப்பிட்டுள்ளபடி தேவகோட்டை, திருவாடானை, ராஜசிங்கமங்கலம், பரமக்குடி, முதுகுளத்தூர், அருப்புக்கோட்டை, விருதுநகர் போன்ற இடங்களை இணைக்கக்கூடிய ஒரு ரயில் பாதையை அமைப்பதற் கான முயற்சியை சர்க்கார் எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

எக்ஸ்-கிரிமினல், ஸ்காலர்ஷிப், மற்றும் பிற்பட்ட வகுப்பினர் ஸ்காலர்ஷிப் ஆகியவைகள் விஷயத்திலே இதுவரையில் ரினியூவல் கேஸ்களுக்குத்தான் பணம் கொடுக்கப்பட்டு வருகிறது. ஆனால் புதிதாக விண்ணப்பிக்கப்பட்ட விண்ணப்பங்களுக்கும் இதுவரை பணம் வந்து சேரவில்லை. கல்லூரியிலே படிக்கக்கூடிய மாணவர்களுக்கு பரீட்சை நெருங்கிக் கொண்டிருக்கிறது. இந்த மாதிரி சமயத்தில்கூட ஸ்காலர்ஷிப் வரவில்லையென்றால், அவர்கள் ஹாஸ்டலில்கூட இருந்து படிக்க முடியாத ஒரு நிலை ஏற்பட்டிருக் கிறது என்று தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்கிறேன். ஒவ்வொரு வருஷமும் இப்படித்தான் தாமதமாக வந்து கொண்டி ருப்பதைப் பார்க்கிறோம்.

**THE HON. SRI P. KAKKAN :** வருடா வருடம் இப்படித் தாமதமாகிறது என்ற காரணத்தினாலேதான், இந்த வருடத்தி லிருந்து ஜில்லா ஹரிஜன் வெல்பேர் ஆபிசர் மூலம் அந்தந்த ஜில்லாவிற்கு என்று ஒதுக்கப்பட்டுள்ள தொகையை கொடுத்து விநியோகிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அப்படி வரவில்லை யென்று சொன்னால், நிதி எவ்வளவு இருக்கிறதோ, அதற்குத் தக்கபடிதான் கொடுத்திருப்பார்கள் என்று தெரிவித்துக் கொள் கிறேன்.

**SRI D. SUBRAMANIA RAJAKUMAR :** இதுவரையிலும் ரினியூவல் கேஸ்கள்தான் வந்திருக்கின்றன. புதியதாக போடப் பட்டுள்ள விண்ணப்பங்களுக்கு வரவில்லை. சிவகங்கை கல்லூரியைப் பொறுத்தவரையில் பிற்பட்ட வகுப்பு மாணவர் களுக்கும், எக்ஸ்-கிரிமினல் மாணவர்களுக்கும் புதிதாக விண்ணப் பிக்கப்பட்டவர்களுக்கு உதவி இன்னும் வரவில்லையென்பதை நான் கனம் அமைச்சர் அவர்களுக்கு கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இதனால் அங்குள்ள மாணவர்கள் மிகவும் கஷ்டமான நிலைமையில் இருந்து வருகிறார்கள். இப்போது அவர்களுக்கு பரீட்சைகள் நெருங்கிக் கொண்டிருக்கிறது. ஆகவே கனம் அமைச்சர் அவர்கள் உடனடியாக தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டு, ஆவன செய்யவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

[Sri D. Subramania Rajakumar] [24th January 1961

கோயம்புத்தூரிலே ஒரு புதிய யூனிவர்சிடியை கொண்டு வரப் போவதாக தெரிய வருகிறது. அதை மதுரையிலே ஏற்படுத்த வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். ஏனெனில் மதுரை மாவட்டத்தைச் சுற்றி மிகவும் பிற்பட்ட மாவட்டங்கள் இருக் கிறது. ஆகவே மதுரையில் ஒரு யூனிவர்சிடியை ஏற்படுத்திஞல், அதைச் சுற்றியுள்ள மாவட்டங்கள் கல்வித் துறையிலே முன்னுக்கு வர ஒரு வாய்ப்பு இருக்கிறது. ஆகவே அதையும் உடனடியாக சர்க்கார் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

கடைசியாக, அதிகாரிகள் விஷயமாக தனிப்பட்டவர்கள் தலையீட்டினுல் அவர்களுக்கு வேண்டிய பகுதியிலே அவர்களுக்கு ஏற்ற ஒரு அதிகாரியை வைத்துக்கொண்டு, அவர்களிடம் சலுகை யும், பிறகாரியங்களையும் பெறுகின்றனர். அந்த அதிகாரிகளும் அவர்களிடம் நல்ல முறையிலே நடந்து கொள்கிருர்கள். இது ஒரு அநீதியான காரியம் என்பதை சொல்லிக் கொள்கிறேன். முக்கியமாக ஒரு மாவட்டத்திலே ஒரு மாவட்ட அதிகாரி மாற்றப் படுவதற்குக் காரணம், அம்மாவட்ட அதிகாரி அங்கு மூன்று வருஷங்களுக்கு மேல் தொடர்ந்து பணியாற்றக்கூடாது என்பது வழக்கமான கருத்து. ஆனல் கிழக்கு ராமநாதபுரம் மாவட்டத் திலுள்ள தேவகோட்டையிலே உள்ள ஆர்.டி.ஓ. நான்கு வருஷங் களாக அங்கேயே தொடர்ந்து இருந்து வருகிருர். சென்ற வருடம் அவர் மாற்றப்பட்டார். பிறகு திடீரென்று தந்தி மூலம் மாற்றல் உத்திரவை கான்சல் செய்து மறுபடியும் சென்ற மாதம் அவர் மாற்றப்பட்டு, மற்ருெரு நபர் அங்கு வருவதாக பத்திரிகை களிலேகூட வெளி வந்தது. ஆனல் கடைசியாக மறுபடியும் தந்தி மூலமாக அவர் மாற்றல் உத்திரவு கான்சல் செய்யப்பட்டு, அங்கு தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிருர். சர்க்காரிலே ஒரு மாவட்ட அதிகாரி தொடர்ந்து மூன்று ஆண்டுகளுக்குமேல் ஒரு இடத்தில் இருக்கக்கூடாது என்ற நல்ல கொள்கையை வைத்துக் கொண்டிருந்தும், தனிப்பட்ட ஒரு சிலருக்காக ஒரே பகுதியில் மூன்று ஆண்டுகளுக்குமேல் தொடர்ந்து இருக்க அனுமதிக்கக் கூடாது என்று நான் கேட்டுக்கொள்கிறேன். அதோடு இந்த சர்க்கார் நல்ல முறையிலே உள்ள இந்தக் கொள்கையை பாகு பாடு இல்லாமல் கண்டிப்பாக அமுல் நடத்த வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள் கிறேன்.

* **Sri A. E. CHANDRASEKHARA NAYAGAR :** கனம் சபா நாயகர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் அவர்கள் உரைக்கு நான் எனது நன்றியை தெரிவித்துக்கொண்டு ஆதரித்து சில வார்த்தைகள் பேச இருக்கிறேன். அவர்கள் உரையில் பல நல்ல அம்சங்களைப் பார்க்கலாம். மக்களுக்கு நன்மை அளிக்கக் கூடிய, நம்பிக்கை அளிக்கக்கூடிய அளவில் உரை நிகழ்த்தி இருக் கிருர். வருங்காலத்தில் கட்டாயக் கல்வி வரப்போகிறது என்ற ஒரு நல்ல செய்தியை கொடுத்திருக்கிருர். இவைகளையெல்லாம் நான் வரவேற்கிறேன்.

24th January 1961] [Sri A. E. Chandrasekhara Nayagar]

அள்ள அள்ளக் குறையாத அரசியல் நிர்ணய சட்ட செல்வத்தை நாம் அடைந்திருக்கிறோம். அந்த அரசியல் சட்ட அடிப்படையில் சமதர்ம சமுதாயத்தை ( **Socialistic pattern of Society** ) உருவாக்கும் கொள்கையை உருவாக்கியிருக்கிறார்கள். இவையிரண்டின் அடிப்படையில் திட்டங்கள் தயாராகி இருக்கின்றன. அப்படி தயாரிக்கப்படும் திட்டங்கள் கிராமாந்திரங்களிலுள்ள ஏழை, எளிய மக்கள் அனுபவிக்கக்கூடிய அளவிற்கு, அனுபவித்துப் பயன்பெறக்கூடிய முறையில் திட்டங்கள் செய்யப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால், அதில் பல தடைகள் இருந்து வருகின்றன. இந்தக் தடைகளை அரசியலிலுள்ள ஒவ்வொருவரும் சிந்திக்க வேண்டியது கடமையாகும். இந்தத் தடைகளுக்கு சில முக்கியமான காரணங்கள் இருப்பதாக நான் கருதுகிறேன். ஒன்று, நம்முடைய அரசியல் சட்டம் ஏற்படுவதற்கு பல நூற்றாண்டுகளாக ஏகாதிபத்திய அடிப்படையில் இருந்த சட்ட திட்டங்கள் எல்லாம் அப்படியே இருந்து வருவது ஆகும். அவை மறு பரிசிலனை செய்யப்படவில்லை. இரண்டாவதாக, நம்முடைய நிர்வாக அமைப்பு பழங்காலத்தில் எப்படி ஏற்பட்டதோ, எப்படி இருந்து வந்ததோ, அப்படியே இப்போதும் இருந்து வருவதாகும். மூன்றாவது காரணம், நம்முடைய மக்களுடைய கவனம் பெருவாரியாக அரசியலில் இழுக்கப்பட்டிருப்பதாகும். இம்மாதிரியான ஒரு சூழ்நிலை இன்று நமது சமுதாயத்தில் உருவாகப்பட்டிருக்கிறது. இந்த மூன்று குறைகளினாலும்தான் ஏழை எளிய மக்கள் நன்மையும் அடைய முடியாமல் இருக்கின்றது என்று நான் கருதுகிறேன். ஆகவே இந்த சர்க்கார் செய்கின்ற நன்மைகளையெல்லாம், மக்கள் அனுபவிக்க வேண்டுமானால், அரசியல் சட்டத்திற்கு முரணாக இருந்து வரும் பழைய சட்டதிட்டங்களை மறு பரிசிலனை செய்து, எந்தெந்த அம்சங்களை அதிலிருந்து நீக்க வேண்டுமோ அவைகளையெல்லாம் நீக்குவதற்காக ஒரு உயரிய குழுவை அமைத்து பரிசீலனை செய்தால், நல்ல முறையில் மக்கள் பயன் பெறுவார்கள். குறிப்பாக, கடந்த சில மாதங்களுக்கு முன்பு ஆந்திராவில் மணியம் இசும்பு சட்டம் செல்லாது என்றும் அரசியல் சட்டத்திற்கு விரோதம் என காரணம் காட்டி சுப்ரீம் கோர்டில் தீர்ப்பளிக்கப்பட்டது. இவ்வாறு சர்க்கார் பல நன்மைகளை மக்களுக்குச் செய்ய முன்வந்தாலும், அவைகளால் மக்கள் பயனடைய முடியாத ஒரு நிலைமை ஏற்பட்டு விடுகிறது. ஆகவே இவைகளையெல்லாம் திருத்தி அமைத்தால், பல நல்ல நன்மைகளை மக்கள் அனுபவிக்க முடியுமென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக 'சோஷலிஸ்டிக் பாடர்ன்' என்ற கொள்கையை சர்க்கார் தலைவர்கள், சர்க்கார் தலைமை பீடத்தில் மட்டும் நாம் வைத்துக்கொண்டிருந்தால் போதாது. சர்க்கார் இலாகாவிலுள்ள ஒவ்வொருவரும் பரவலாக சர்க்காரில் உள்ள கடைசி ஊழியர்கள் வரை அந்தக் கொள்கையை எந்த முறையில் கையாள வேண்டும், எந்த அடிப்படையில் நாம் நடக்கவேண்டும் என்று திட்டவட்டமாக நாம் தெரிவிக்க வேண்டும். அப்படி 11-00 p.m.

[Sri A. E. Chandrasekhara Nayagar] [24th January 1961

தெரிவித்தால்தான் அதனுடைய பலாபலன்களை எல்லா மக்களும் அனுபவிக்க முடியும் என்று நான் கருதுகிறேன்.

அடுத்தபடியாக, மக்களுடைய கவனத்தை அதிகமாக அரசியலில் ஈடுபடுத்தி, அவர்கள் பொருளாதாரத் துறையிலும் சமுதாயத் துறையிலும் பின்னடையச் செய்திருக்கிறோம். ஆகவே, சர்க்காரும், அரசியல் கட்சிகளும், பத்திரிகைகளும் முன்வந்து ஒரு திட்டவட்டமான கொள்கையை நம்மிடையே வகுத்துக் கொண்டு, மக்களின் கவனத்தை அரசியலில் அதிகமாக ஈடுபடுத்தாமல் பொருளாதாரத் துறையிலும் சமுதாயத் துறையிலும் அவர்கள் முன்னேறுவதற்கு வழிவகைகளைச் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, பிற்பட்ட மக்களைப்பற்றி கூற விரும்புகிறேன். பிற்பட்ட மக்கள் பொருளாதாரத் துறையில் பின் அடைந்திருக்கிறார்கள், 'சோஷலிஸ்ட் பாடர்ன்' கொள்கைகளெல்லாம் ஏழை எளிய மக்களுக்கு ஒரு முகமாக நன்மை பயக்கக்கூடியவைகளாக இருக்கின்றன என்னும் அடிப்படை எண்ணத்தில் பிற்பட்ட மக்கள் முன்னேறுவதற்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது என்று தவறான கருத்தை சர்க்கார் கொண்டிருக்கிறார்கள். பிற்பட்ட மக்கள் பொருளாதாரத் துறையில் முன்னேறுவார்கள் என்ற சர்க்காரின் நம்பிக்கை சரியானதாகும்; ஆனால், Practical -ஆக அவர்கள் பல துறைகளிலும் பல ஆண்டுகளாக பின்னடைந்திருக்கிறார்கள். அவர்கள் எந்தத் துறைகளில் பின்னடைந்திருக்கிறார்களோ அந்தத் துறைகளை அறிந்து ஆவன செய்யவேண்டும். இந்த அடிப்படையில்தான் தீர்க்கதரிசிகளாக இருந்த நம்முடைய பெரிய தலைவர்கள் பிற்பட்ட மக்களின் நிலையை விசாரித்து ஒரு அறிக்கை சமர்ப்பிக்க வேண்டும், அதன்படி அவர்கள் முன்னேற வழிவகை செய்ய வேண்டும் என்று ஒரு குழுவை நியமித்தார்கள். ஆனால், துரதிருஷ்ட வசமாக காகா காலேல்கார் அவர்களுடைய தலைமையில் அமைந்த குழுவின் சிபாரிசுகள் அமுலுக்குக் கொண்டுவரப் படாமலே போய்விட்டன. அது பெரிய தவறு என்று கருதுகிறேன். அந்தக் குழுவின் அறிக்கையை அமுலுக்குக் கொண்டு வரும்படி இந்த சர்க்கார் மத்திய சர்க்காரிடம் வற்புறுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக இந்த சந்தர்ப்பத்தில் ஒரு முக்கியமான விஷயத்தைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அறநிலைய பாதுகாப்புக் கமிஷனர் பட்சபாதமாக நடந்துகொண்டிருக்கிறார் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இப்பொழுது மதுரையில் அழகர் மலையில் வைஷ்ணவர் கோவில் உள்ள இடத்தில் வேறு ஒரு கோவில் எற்படுத்துவதற்கு அவர் உடந்தையாக இருந்திருக்கிறார். நம் சர்க்கார் பழைய காலத்தில் இருந்தே, அன்னிய ஆட்சி காலத்தில் இருந்தே மத சம்பந்த விஷயங்களில் தலையிடுவதில்லை என்று ஒரு கொள்கையை வகுத்துக்கொண்டிருந்தது. நம்முடைய அரசியல் சட்டமும் மத சம்பந்தப்பட்ட விஷயத்தில்

24th January 1961] [Sri A. E. Chandrasekhara Nayagar]

தலையிடுவதில்லை என்று உறுதியும் அளித்திருக்கிறது. ஆகவே, இம்மாதிரி சந்தர்ப்பத்தில் அறநிலையங்களை பாதுகாக்கவேண்டுமே தவிர, கமிஷனர் அவர்கள் அதில் தலையிட்டு பக்தர்கள் மனம் புண்ணுகும்படி ஒருதலைப்பட்சமாக செய்யக்கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேலும், நம்முடைய திட்டத்தில் விவசாயத்திற்காக பல கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். அந்த உதவியை பெறும் விவசாயிகளுடைய நிலையை நாம் கவனிக்கவேண்டும். எப்படி என்றால், ஒரு உதவி செய்யும் பொழுது உதவி பெறுபவருடைய நிலை என்ன, உதவியைப் பெறுபவர்கள் எப்படி இருக்கிறார்கள் என்பதை அறிந்து உதவி செய்யவேண்டும். ஒருவர் பல்வேறு வியாதியால் பீடிக்கப்பட்டிருந்தால், அந்த வியாதியை போக்காமல், அவருக்கு வைட்டமின் டானிக் கொடுக்கும் முறையில் நாம் உதவி செய்யக்கூடாது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அவருடைய வியாதி என்ன, எந்த முறையில் அவருக்கு உதவி தேவை என்பதை அறிந்து தேவையான உதவியை செய்யக்கூடிய திட்டவட்டமான ஒரு கொள்கையை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலாவது கடைபிடிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

குறிப்பாக விவசாயத் துறையில் நீர்ப்பாசன வசதிகள் அதிகமாக பெறுவதற்கு பல ஜில்லாக்களைப்பற்றி சொல்லியிருக்கிறார்கள். என்னுடைய வட ஆற்காடு ஜில்லாவைப் போன்ற சில ஜில்லாக்கள் இருக்கின்றன. அது மிகவும் பின்னடைந்த பகுதி என்பது எல்லோருக்கும் தெரியும். வட ஆற்காடு ஜில்லாவில் கிராமாந்திரங்களில் ஏழை எளிய மக்கள் 4 அணு, 8 அணு கூலிக்குப் போகிறார்கள் என்றால், அவர்களுடைய நிலை எப்படி இருக்க முடியும் என்பதை சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். இதைப்போல வரண்ட ஜில்லாக்களில் நல்ல வாய்ப்பை உண்டாக்க நீர்ப்பாசன வசதிகள் கண்டிப்பாக வேண்டும். ஐந்து ஏகராவுக்கு ஒரு கிணறு இருக்கவேண்டும் என்ற ஒரு விதியை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும். இப்பொழுது நம்முடைய லோகல் டெவலப்மெண்டு திட்டங்களிலும் மற்றும் பல திட்டங்களிலும் ஒதுக்கப்பட்ட தொகை பல்வேறு சட்ட சிக்கலினால் செலவு செய்ய முடியாதபடி அப்படியே நின்று விடுகிறது. அம்மாதிரி சட்ட சிக்கல்களையெல்லாம் போக்கி அந்தத் தொகையை மக்கள் நல்ல முறையிலே பயன்படுத்தக்கூடிய நிலையை உருவாக்க வேண்டும். அப்பொழுதுதான் செலவு செய்யும் தொகை நல்ல முறையில் பலன் தரும்.

அடுத்தபடியாக, கிராமாந்திரங்களில் உள்ள விவசாயிகளை சிறு தொழில்களில் ஈடுபடுத்தி அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவேண்டும். இப்பொழுது மின்சார பம்பு செட்டுகள் விவசாயிகளுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன. ஓய்வு நேரங்களில் மின்சார பம்பு செட்டுகளை சிறு தொழில்களில் எப்படி அவர்கள் உபயோகப்படுத்தி அவர்களுடைய வருமானத்தை பெருக்க முடியும், கிராமாந்திரங்களில் உள்ளவர்கள்

[Sri A. E. Chandrasekhara Nayagar] [24th January 1961

என்னென்ன செய்ய முடியும் என்பதற்கு வழிவகைகளை வகுத்து சர்க்கார் அறிவிக்க வேண்டும். இப்பொழுது சர்க்கார் பல சிமெண்டு ரோடுகள் போடுகிறார்கள். அவைகளையெல்லாம் கொஞ்ச நாட்களுக்கு நிறுத்தி வைத்து கிராமாந்திரங்களில் உள்ள பொது நெற்களங்களை நவீன முறையில் திருத்தி அமைத்துக்கொடுக்க வேண்டும். கிராமாந்திரங்களிலுள்ள நெற்களங்கள் இன்றும் புராதன முறையிலேயே இருந்து வருகின்றன. சிமென்ட்டு ரோடு போடுவது போல் நவீன முறையிலே பொதுக் களங்களை போட்டுக் கொடுத்தால் தானியங்களை நல்ல முறையில் சீர்படுத்தி, பக்குவப்படுத்தி, அதன் மூலம் உற்பத்தியை பெருக்க முடியும். அதன் மூலம் நல்ல விதைகள் கிடைக்கும். ஒவ்வொரு கிராமத்திலும் பொதுக் களமும், தானிய சேமிப்புக் கிடங்கும், சிறு அளவில் தச்சுப் பட்டறையும், கருமான் பட்டறையும் இருக்க வேண்டும். நம்முடைய நாட்டு மக்களுக்கு தகுந்தாற்போல், ஒவ்வொரு கிராமத்திலும் சிறிய அளவிலே அவர்கள் புரிந்து கொண்டு செயலாற்றக்கூடிய அளவில் ஒரு தச்சுப் பட்டறையும், கருமான் பட்டறையும் ஏற்படுத்துவதற்கு திட்டம் வகுக்க வேண்டும். பெரிய நகரங்களில் போடக்கூடிய திட்டங்களை கொஞ்ச நாட்களுக்கு நிறுத்தி வைத்தாகிலும், தயவுசெய்து கிராமப் புறங்களை கண் திறந்து பார்த்து, கிராம மக்களுக்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்து கொடுக்க வேண்டும். கிராமங்களிலுள்ள விவசாயத் தொழிலாளிகளின் வருமானம் மிகவும் அவல நிலைமையில், கேவலமான நிலையில் இருக்கிறது என்பதை நாம் காண்கிறோம். அந்தப் பெரிய Gap இடை வெளியை எப்படிச் சரி செய்வது என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இந்த gap சரி செய்வதற்கு, நமது கிராமாந்திர மக்கள் முன்னேறுவதற்கு வேண்டிய வாய்ப்புகளை அவர்களுக்கு அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, என்னுடைய சொற்பொழிவை நான் முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI K. S. G. HAJA SHERIFF : கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் இங்கு சில நாட்களுக்கு முன் நிகழ்த்திய உரையை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். அவர்கள் பொதுவாக, நமது ராஜதானியில் நல்லவிதமாக ஒவ்வொரு காரியமும் நடந்து வருகிறது, மக்கள் சந்தோஷமாக இருக்கிறார்கள் என்று அறிவித்திருக்கிறார்கள். அது நாம் எல்லோரும் சந்தோஷப்படவேண்டிய விஷயம். ஆனால், சில பேர்கள் இதை நம்பமாட்டார்கள். உண்மையாக இருந்தாலும்கூட, அதை அவர்கள் நம்பாமல், இன்னும் எவ்வளவோ குறைகள் இருக்கின்றன, மக்கள் சந்தோஷமாக இல்லை, குறைகள் எவ்வளவோ அதிகமாக வளர்ந்துகொண்டே போகின்றன என்றெல்லாம் சொல்லிக்கொண்டே இருப்பார்கள். விவசாயத் துறையில் நமக்கு வேண்டிய அளவு விவசாயம் இருந்தாலும்கூட, சில காரணங்களினால் பற்றாக்குறையாக இருந்து கொண்டு வருகிறது. அதுவும் மற்ற 'ஸ்டேட்களுக்கு' நாம்

அனுப்புவதன் காரணமாக இருக்கிறதே ஒழிய, உண்மையாக நமக்கு வேண்டிய விவசாயத்தை நாமே உண்டு பண்ணி வருகிறோம். மேலும் மேலும் விவசாயத்தை அதிகமாக உண்டு பணணுவதற்கு வேண்டிய வேலைகளைச் செய்து கொண்டு வருகிறோம்.

இண்டஸ்டிரியல் துறையிலும், எவ்வளவோ தொழிற்சாலைகள் வந்துகொண்டிருக்கின்றன. தொழிற்சாலைகள் ஏற்பட்டால் தான் ஊதியம் அதிகமாக வரும். அப்படி இருந்தால்தான் மக்களிடையே சந்தோஷம் பிறக்கும் என்பது உண்மையான விஷயம். அப்படியிருந்தும்கூட, ஒரே காலத்தில் ஒரு வருஷத்திலேயே எல்லா தொழிற்சாலைகளையும் கொண்டு வரமுடியாது. அதற்கும் சில 'ஸ்டேஜஸ்' இருக்கின்றன. அந்தந்த ஸ்டேஜில் அந்தந்த தொழிற்சாலைகள் கொண்டுவந்தால்தான் மக்களிடையே சந்தோஷம் வரும். அப்பொழுதுதான் அவைகளை நாம் நல்லவிதமாக பரிபாலனம் செய்ய முடியும் என்ற ஒரு உண்மை இருக்கிறது. அப்படியிருந்தும்கூட கவர்ன்மெண்டு எவ்வளவோ தொழிற்சாலைகளை ஏற்படுத்திக்கொண்டு வருகிறார்கள். அது வரவேற்கத்தக்கது. மூன்று, நான்கு வருஷங்களில் எவ்வளவோ தொழிற்சாலைகள் வந்துகொண்டிருக்கின்றன, வந்துவிட்டன. மற்ற ராஜ்யங்களைவிட நம்முடைய ராஜ்யத்தில் நல்ல விதத்தில் தொழில்கள் பிரபல்யமாகிக்கொண்டு வருகின்றன என்பதைப் பார்த்து நாம் சந்தோஷப்பட வேண்டும். "எவ்வளவோ நீங்கள் உற்பத்தியைப் பெருக்கியிருக்கிறீர்கள்; எவ்வளவோ புதிய தொழிற்சாலைகளை ஏற்படுத்தியிருக்கிறீர்கள். ஆனால் ஜனங்களிடத்தில் சந்தோஷமில்லையே" என்று ஒரு அங்கத்தினர் கூறினர். இவ்வளவு உணவுப் பொருட்களை அதிகமாக உற்பத்தி செய்தபோதிலும், இன்னும் எல்லா வகைகளிலும் உற்பத்தி பெருகியும்கூட, பற்றாக்குறையாகத் தான் இருக்கிறது. "நிறைய இருக்கிறது, வாங்குவோர்" இல்லை என்ற குறையே கிடையாது. ஆகவே மக்களின் வாங்கும் சக்தி அதிகரித்துக் கொண்டே போகிறது. அதாவது, அவர்களுடைய வருமானமும் அதிகரித்து கொண்டே போகிறது. அதன் காரணமாகத்தான் இந்தமாதிரி அதிகப்படியாக உற்பத்தியாகும் பொருள்களை வாங்குவதற்கு சாத்தியமாகிறது. அதனால்தான் இன்னும் பொருள்களை உற்பத்தி செய்ய வழி வகுக்கிறார்கள். இது உண்மை. இதை விட்டுவிட்டு, "விலைவாசிகள் அதிகமாகிக் கொண்டே போகின்றனவே, இனி மேல் தொழில்களை வளர்க்கக்கூடாது, விவசாயத்தில் கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும்" என்று சிலர் சொல்லுகிறார்கள். எந்த நாட்டினுடைய சரித்திரத்தை எடுத்துக்கொண்டாலும், அந்த நாடு சுபிட்சமாக இருக்கவேண்டுமென்றால், அங்கே தொழில்கள் பெருக வேண்டும். உணவுப் பொருள்களில் பற்றாக்குறை இல்லாமல் இருந்தால்தான், ரொம்பவும் தீவிரமாக மற்ற வேலைகளில் ஈடுபட முடியும். அப்படியானால்தான் நாட்டின் "பெர் காபிடா" வருமானம் உயரும். நம்முடைய ராஜ்யத்தை எடுத்துக் கொண்டால், சென்ற 5 வருஷங்களில் நம்முடைய பெர் காபிடா

[Sri K. S. G. Haja Sheriff] [24th January 1961

வருமானம் 40 சதவிகிதம் அதிகமாகியிருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. இதை நான் மட்டும் சொல்லவில்லை. வெளி தேசங்களிலிருந்து வரும் பொருளாதார நிபுணர்கள் இதைக் கணக்கிட்டிருக்கிறார்கள். மற்ற ராஜ்யங்களைக் காட்டிலும், நம்முடைய ராஜ்யத்தில் தொழில் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது, ஊக்கத்துடன் பல தொழில்களை நாம் செய்துகொண்டு வருகிறோம் என்று அவர்கள் தீர்மானமான முடிவு கூறியிருக்கிறார்கள். இப்படி ஒவ்வொரு துறையிலும் நம்முடைய அரசாங்கம் முன்னேறிக் கொண்டு வருகிறது என்பதை யாரும் மறுக்கமுடியாது.

குறிப்பாக தூத்துக்குடித் துறைமுகத்தை ஒரு ஆழ்கடல் துறைமுகமாக ஆக்க நிர்மானித்திருப்பதை நாம எல்லோரும் ஆதரிக்கவேண்டும். சென்னைத் துறைமுகத்திற்கு அடுத்தாற்போல் கொச்சித் துறைமுகம் இருக்கிறது. இந்த இரண்டிற்கும் நடுவில் எந்தத் துறைமுகமும் பெரிய துறைமுகமாக இல்லை. தூத்துக் குடித் துறைமுகம் ஒரு பெரிய துறைமுகமாக அபிவிருத்தி அடைந்தால், அந்தத் துறைமுகம் ஐந்து ஜில்லாக்களுக்கு ரொம்பவும் உதவியாக இருக்குமென்று சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். அங்கே பெரிய தொழிற்சாலைகள் வளர்ந்துகொண்டு வருகின்றன. அது மட்டுமல்ல. சிலோன் துறைமுகத்தில் சில சமயங்களில் நெருக்கடியான நிலைமை ஏற்படுவதுண்டு. கப்பல் காரர்கள் சில சமயங்களில் அங்கே கப்பல்கள் அனுப்பு வதற்குக்கூட தயங்குகிறார்கள். தூத்துக்குடி பெரிய துறை முகமானால், கொழும்புத் துறைமுகத்தில் இறக்கவேண்டிய ஒரு பகுதிப் பொருள்களை தூத்துக்குடியில் இறக்கி விட்டு, அங்கிருந்து கொழும்பிற்கு அனுப்புவதற்கு சாத்திய மாக இருக்கும். ஆகவே இதை ஒரு பெரிய துறை முகமாக்கப் போகிறார்கள் என்ற தீர்மானத்திற்கு வந்த தற்கு நம்முடைய அரசாங்கத்திற்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். இதுபற்றி நாம் எல்லோரும் அவர் களைப் பாராட்டவேண்டும். அதே சமயத்தில் சிறிய துறை முகங்களை அபிவிருத்தி செய்யவேண்டுமென்றும் தெரிவித்துக் கொள்கிறேன். சிறிய துறைமுகங்களை நல்ல நிலைமையில் வைத்துக் கொண்டால், அதன்மூலம் பெரிய துறைமுகங்களுக்கு வரக்கூடிய நெருக்கடியையோ, கஷ்டங்களையோ நாம் தீர்த்துக்கொள்ளலாம். சிறிய துறைமுகங்களை அபிவிருத்தி செய்வதில் சில கஷ்டங்கள் தான் இருக்கின்றன. அந்தக் கஷ்டங்களை சீக்கிரத்தில் நிவர்த்தி செய்யலாம். முக்கியமான கஷ்டம் என்னவென்றால், சிறிய துறை முகங்களில் "பார்" என்ற ஒரு வழியிருக்கிறது. இருபத்திநான்கு மணி நேரமும் அதை ஆழமாக்குவதற்காக ஒரு கருவியைக் கொண்டுவந்து வைத்துக்கொள்வோமேயானால், 24 மணி நேரமும் அதன் மூலம் போட்டுகள் போக்குவரத்து நடைபெறலாம். அதன் மூலம் அந்தத் துறைமுகத்தில் வியாபாரம் அதிகமாக ஏற்படும். இதனால் சுற்றியுள்ள வட்டாரங்கள் செழிப்புறுமென்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

இன்னும் பெரிய தொழிற்சாலைகள் நம் நாட்டில் ஏற்பட வேண்டியது மிகமிக அவசியம். இங்கே ஒரு அங்கத்தினர் பேசும் பொழுது, சர்க்காரே ஒவ்வொரு தொழிலையும் நடத்த வேண்டும், தனியார் துறைக்கு விட்டுவிடக்கூடாது என்றார். ஒரு பெரிய தொழிற்சாலையை நடத்துவது என்பது சாதாரணமான விஷயமல்ல. அதற்கு சரியான மானேஜ்மென்ட் வேண்டும். அப்படியில்லாவிட்டால் சரியானபடி நடக்காது. தவிர, வேண்டிய முதலீடும் செய்யவேண்டும். இப்பொழுது சர்க்கார் 10 கோடி ரூபாய் முதலீடு செய்கிறார்கள் என்றால், ஒன்று அல்லது இரண்டு பெரிய தொழிற்சாலைகள்தான் ஏற்படும். ஆனால் இதே பணத்தை வைத்துக்கொண்டு தனிப்பட்டவர்களுக்கு உதவி அளித்தால் சுமார் 10 தொழிற்சாலைகளை ஏற்படுத்தலாம். அது மட்டுமல்ல. வேலையில்லாத் திண்டாட்டமும் ஓரளவுக்குத் தீரும். உற்பத்தி பெருகும். நாட்டின் செல்வம் பெருகும். நாட்டின் செழிப்பு ஓங்கும். அப்படி சர்க்கார் உதவி செய்ய முன்வருவார்களேயானால், ஊக்கம் அளிப்பார்களேயானால், தொழில் நடத்துபவர்கள் மேலும் மேலும் பெரிய பெரிய தொழில்களை நடத்த முன்வருவார்கள். சர்க்கார் நடத்தும் தொழிலைப்போல வருமானம் வராது என்று கூறினார். எப்படி வராது என்று கேட்கிறேன். இன்று இன்கம் டாக்ஸ், சூப்பர் டாக்ஸ் ஸ்டரக்சரை எடுத்துக்கொண்டால், சர்க்கார் நடத்தும் தொழில்களில் கிடைக்கும் வருமானமும், தனியார் நடத்தும் தொழில்களில் கிடைக்கும் வருமானமும் சராசரியாக இருக்குமே தவிர, அதற்குக் குறைந்துவிடாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கவர்னர் உரையில் சிறுரகத் தொழில்களுக்காக 10 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம் என்று கூறினார்கள். இது மிகவும் வரவேற்கத்தக்கது. ஏனென்றால் பெரிய தொழில்கள் மட்டும் வளர்ந்தால் போதாது. சிறிய தொழில்கள் அநேகம் வந்தால்தான் மக்களின் வாழ்க்கைத் தரம் உயரும். குடிசைத் தொழில்கள், கிராமத் தொழில்கள், இன்னும் "மீடியம்" தொழிற்சாலைகள் எல்லாம் வந்தால்தான் நம்முடைய ராஜ்யம் வளம் பெறும். உதாரணமாக, நாம் இரு தேசங்களை எடுத்துக் கொள்ளலாம். இரண்டாவது உலக யுத்தத்தில் ஜப்பான், மேற்கு ஜெர்மனி ஆகிய இரு நாடுகளும் வெகுவாக பாதிக்கப்பட்டன. அவர்கள்தான் ரொம்பவும் அடியும் இடியும் வாங்கினார்கள். ஆனால் 12 வருட காலத்திற்குள் இன்று உலகத்திலேயே மிகவும் முன்னேற்றம் அடைந்து மகத்தான தேசங்களாக விளங்குகின்றன. இதற்குக் காரணம் தொழில் துறையில் அவர்கள் காட்டிய ஊக்கமும், தைரியமும் அவர்கள் போட்ட திட்டங்களும்தான். அதனால்தான் அவர்கள் இன்று இவ்வளவு தூரம் முன்னேற்றமடைந்திருக்கிறார்கள். ஆகவே இன்னும் அதிகமான தொழிற்சாலைகளை ஏற்படுத்தவேண்டும், தொழில்கள் வளருவதற்கு எல்லாவிதமான சௌகரியங்களையும் செய்து தரவேண்டும், அதற்கான சூழ்நிலையை ஏற்படுத்தவேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

[Sri K. S. G. Haja Sheriff] [24th January 1961

இப்பொழுது கவர்னர் அவர்கள் உரையில் மதராஸ் ஸிடியைப் பொருத்த மட்டும் எந்தவிதமான ஒரு நன்மையையும் பெரும் வழிக்கு இடம் இல்லை என்பதைக் குறித்து வருந்துகிறேன். அநேக தடவைகள் இந்த ஹௌஸிலேயே நான் சொல்லியிருக்கிறேன், குடிசை வாழ்பவர்கள் சங்கடத்தைப் போக்கி, இந்தக் குடிசைகளே இல்லாமல் இருக்கக்கூடிய நிலையை உண்டாக்க வேண்டும் என்று. ஒரு தலைநகரமான ஸிடியில், குடிசை வாழ் மக்களின் நிலை இப்படியே இருந்து கொண்டிருந்தால், நகரத்தின் ஹெல்துக்கே அபாயகரமாக இருக்கிறது. மேலும், நகரத்துக்கு மற்ற நாட்டு மக்கள் வரும்போது, இந்த ஸ்லம்-களைப் பார்த்தால், ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது. அவர்கள் கஷ்டப் படுவதை விட, நமக்கே இந்தக் குடிசைவாழ் மக்கள் வாழ்க்கையைக்காண ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது. ஆகவே இந்த ஸ்லம்கள் இல்லாமல் இருக்கவேண்டும். அதுவும் என்னுடைய தொகுதியில் அதிகமாக ஸ்லம்கள் இருக்கின்றன. அவைகளைச் சீர்திருத்தவும் கஷ்டமாக இருக்கிறது. சீர்திருத்த வருபவர்களுக்கு சிலர் கஷ்டங்கள்கூட விளைவிக்கிறார்கள். ஆகவே, இது சம்மந்தமாக சர்க்கார் ஒரு சட்டத்தையே கொண்டு வந்து, இந்த ஸ்லம்-களை ஒழித்து அல்லது அவைகளை இம்ப்ரூவ் பண்ண ஒரு ஆக்டே கொண்டு வந்து, அதற்கு எல்லா கட்சிக்காரர்களும் ஒத்துழைப்புத் தரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடிக்கிறேன்.

**Mr. SPEAKER :** இன்னும் பத்து அங்கத்தினர்கள் பேச வேண்டும் என்று என்னிடம் பேர் கொடுத்திருக்கிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த அங்கத்தினர் கனம் அன்பழகன் தலைவருக்காக ஒதுக்கி வைத்த அரைமணியைக் கொடுக்கும்படி கேட்கிறார். ஆகவே, மற்ற அங்கத்தினர்கள் ஒவ்வொருவருக்கும் எட்டு நிமிஷம்தான் கொடுக்க முடியும் என்பதைச் சொல்லிக் கொள்ளுகிறேன். எட்டு நிமிஷம் ஆனவுடன் மணியடிக்கிறேன், மணியடித்தவுடன் அங்கத்தினர்கள் உட்கார வேண்டும். அப்பொழுதுதான் ஒன்பது அங்கத்தினர்களுக்கும் பேச அவகாசம் கிடைக்கும். இம்மாதிரியான நெருக்கடிக்கு அங்கத்தினர்கள்தான் காரணம். இரண்டாம், மூன்றாம் நாளில் பேச அங்கத்தினர்கள் முன்வரவில்லை. எல்லாரும் கடைசி நாளில் பேச வேண்டுமென்றால் எப்படி முடியும்? ஆகவே, எவ்வளவு கஷ்டம் இருந்தாலும், பொறுத்துக்கொண்டு, எட்டு நிமிஷத்திற்குள்ளாக ஒவ்வொரு அங்கத்தினரும் தன் பேச்சை முடித்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Sri A. R. MARIMUTHU :** இப்பொழுது மூன்றாவது திட்டம் வகுத்து முடிக்கும் நிலையில் இருக்கிறோம். இன்னும் இரண்டு மூன்று மாதங்களில், மூன்றாவது திட்டத்தை ஆரம்பிக்கும் நிலையில் இருக்கிறோம்.

**(Sri M. Selvaraj in the Chair.)**

நம் மாகாணத்திற்கு ரூபாய் 291 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று அரசாங்கத்தாரால் அறிவிக்கப்பட்டிருக்கிறது. ரூபாய் 190

கோடி மத்திய சர்க்காரால் கொடுக்கப்படுவதாகவும், பாக்கி 100 கோடி, இந்த ராஜ்ய சர்க்காரே ஈடு செய்து கொள்ளும் என்ற நிலை இருக்கிறது. இந்த 100 கோடி ரூபாயை பழைய வரியையே போட்டு நாம் இதிலே எவ்வளவு ஈடு செய்து கொள்ளமுடியும், புதிதாக எவ்வளவு நாம் வழி செய்ய வேண்டும் என்ற விவரங்கள் தெரியவில்லை. இதைத் தயவுசெய்து அரசாங்கம் தெளிவு படுத்த வேண்டும். இன்றைக்கு இருக்கும் நிலையில், சாதாரண மக்களுக்கு ஏற்கனவே வரியினால் பாதிக்கப்பட்டு, விலைவாசி உயர்வினால் இருக்கும் நிலையில், அவர்கள் வாழ்க்கைத்தரம் குறைந்து போய் இருக்கிறது. ஆகவே, இன்றைக்கு நாம் மூன்றாவது திட்டத்துக்கு போகிய வரிகளை சாதாரண மக்கள் தலையில் போடக்கூடிய நிலையில் இல்லை, அதை அரசாங்கம் ஏற்படுத்தக்கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நாம் புதிய திட்டங்கள் போடும்போது பண வசதியை அதிகரிக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. அம்மாதிரி நிலையில், புதியது வருவாய்களை அதிகரிக்க, சாதாரண மக்கள் தலையில் வரியைச் சுமத்தாமல், புதுத் துறையில் வருவாயை அடைய முன்கூட்டியே சிந்தித்து, அதற்கேற்றவாறு வருவாயை அதிகரிக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது விலைவாசி மிகவும் ஏறிய நிலையில் இருக்கிறது. உணவு தானியங்கள் விலை அதிகமாக இருக்கிறது. சாதாரணமாக அரிசி விலையை எடுத்துக்கொண்டால் சாதாரண மக்கள் வாங்கிச் சாப்பிட முடியாத அளவுக்கு விலை உயர்ந்து போய் இருந்தது. இம்மாதிரி விலை உயர்வால், விவசாயிகளுக்கு, சிறு நிலக்காரர்களுக்கு, இந்த விலை உயர்வால் செழிப்பு ஏற்படும் என்ற ஒரு எண்ணம் பொதுவாக இருக்கிறது. அந்த எண்ணம் தவறு என்பதை அரசாங்கம் கவனத்தில் கொள்ள வேண்டும். சாதாரணமாக சிறு நிலம் வைத்திருக்கும் விவசாயிகள், இன்றைக்கு அறுவடையானவுடன் சர்க்கார் லெவி கட்டவும், முன்னமே வாங்கியிருந்த கடனைக் கட்டவும், மார்கெட்டில் உடனுக்குடனே விற்றுவிடும் நிலையில் இருக்கிறார்கள். விலை ஏறும்போது அதிக விலைக்கு விற்க வைத்துக் கொள்ளும் நிலையில் இல்லை. ஆகவே, அவர்கள் குறைந்த விலையில் விற்று விட்டுப் போய்விடுகிறார்கள். இடையில் இருக்கும் வியாபாரிகள், அப்படிப்பட்ட வியாபாரத்திற்காகவே இருக்கும் வியாபாரிகள் அந்த நெல்லை வாங்கி, பின்னால் அதிக விலைக்கு விற்று லாபம் அடைகிறார்கள். ஆகவே, இது அந்த விவசாயிகளுக்குப் போகிறதில்லை, இடையில் உள்ள தாகர்களுக்கு, வியாபாரிகளுக்குத் தான் போய்ச் சேருகிறது. இதுதான் இன்றைக்கு இருக்கும், நாம் கண்கூடாகக் காணும் உண்மை. தஞ்சை ஜில்லாவில் இப்பொழுது அறுவடை ஆரம்பித்திருக்கிறது. அங்கே ஒரு மூட்டை ரூ. 23-க்கு விற்றுக் கொண்டிருந்தது. இப்பொழுது அறுவடை காலமானதால், அது ரூ. 18-க்கு குறைந்து விட்டிருக்கிறது. ரூ. 23-க்கு விற்ற நெல் 18 ரூபாய்க்கு விற்கும் சமயத்தில், சாதாரண விவசாயி 18-க்கு விற்காமல், அதிக விலை கூடும் வரை

[Sri A. R. Marimuthu] [24th January 1961

வைத்து விற்போம் என்று வைத்திருக்க முடியாது. அந்த நெல்லை வாங்கி ஸ்டாக் செய்து, அதிக விலை ஏறும் காலத்தில் விற்பது விவசாயி அல்ல, அந்த விலை ஏற்றத்தால் ஏற்படும் நன்மை விவசாயிக்குப் போய்ச் சேருவதில்லை என்பதைச் சர்க்கார் கவனிக்கவேண்டும். ஆகவே, விலை விஷயத்தில் கட்டுப்பாடான உத்தரவாதம் இருக்கவேண்டும். மார்கெட்டில் விவசாயிகள் விற்கும் விலைக்கும், வாங்கிச் சாப்பிடுபவர்கள் கொடுக்கும் விலைக்கும் அதிக வித்தியாசம் இருக்கக்கூடாது. இதை ஆலோசித்து அரசாங்கம் தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். இப்பொழுது இருக்கும் நிலையில் உற்பத்தியாளருக்கும், வாங்கிச் சாப்பிடுகிறவர்களுக்கும் பலன் இல்லை; இடையில் உள்ளவர்களுக்குத்தான் பலன் போகிறது.

அடுத்தபடியாக உணவு உற்பத்தி அதிகமாகப் பெருக வேண்டும் என்று பேசும்போது, பல ஆயிரக்கணக்கான, சாகுபடிக்கு லாயக்கான நிலங்கள் சாகுபடிக்குக் கொண்டுவரப்படாமல் இருக்கிறது. சாகுபடிக்கு லட்சக் கணக்கான விவசாயிகள் தயாராக இருந்து, நிலங்களை ஜாரி செய்து கொடுங்கள் என்று கேட்டும், அவர்களுக்குப் பட்டா செய்து கொடுப்பதில் காலதாமதம் ஆகக்கூடாது. அதற்கேற்ற நடவடிக்கை அரசாங்கம் துரிதமாக எடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஹரிஜனங்களுக்கு மனைக்கட்டுகள் கட்டிக் கொடுக்கும் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. எத்தனை ஹரிஜனங்களுக்கு மனைக்கட்டுகள் கட்டிக் கொடுக்கப்பட்டிருக்கிறது? வெகுக் குறைந்த நபர்களுக்கே கொடுக்கப்பட்டிருக்கிறது. என் தொகுதியில் ஒரு கிராமத்தில் 20 பேருக்குத்தான் வீடுகள் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஹரிஜனங்களைத் தவிர, இன்னும் நிலம் இல்லாதவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள். பிறர் மனைக்கட்டுகளில் இருந்துகொண்டு பல கஷ்டங்களுக்கு உள்ளாகிறார்கள். ஆகவே, ஹரிஜனங்கள் மட்டுமின்றி, மற்ற நிலம் இல்லாதவர்களுக்கும், இம்மாதிரியான எல்லா விவசாயிகளுக்கும் மனைக் கட்டுகள் வழங்கவேண்டுமென்று, அதற்கேற்ற திட்டத்தை அரசாங்கம் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தது உர விநியோகம் பற்றியது. ரசாயன உரங்கள் வாங்க அரசாங்கத்தால் கடன் கொடுக்கப்படுகிறது. அதையும் காலத்தோடு கொடுத்தால், அநேகம் பேர்கள் பயனடைவார்கள். அதிலேகூட அநேகம் பேர்கள், மார்கெட்டில் விற்றுவிடுகிறார்கள்; ஏனென்றால், விவசாயம் செய்ய போதுமான பணம் அவர்களிடம் இல்லை; ஆகவே, உரத்தை விற்றாவது விவசாயம் செய்யலாம் என்றுதான் உர லோன் போடுகிறார்கள். ஆகவே உரத்தை வாங்கினாலும், அதை விற்கும் நிலை ஏற்படுகிறது. ஆகவே, நாம் உர லோன் தொகையை பணமாகக் கொடுத்தால், உரத்தில் ஏற்படும் கள்ள வியாபாரம் நடக்க முடியாமல் தடுக்க முடியும்.

24th January 1961] [Sri A. R. Marimuthu]

பாக்கேஜ் மில் திட்டம் எங்கள் ஜில்லாவில் கொண்டு வரப் பட்டிருகிறது. அதைப் பற்றியெல்லாம், பெருமையாகப் பேசு கிறோம். ஓரளவு கடன் வசதிகள் செய்யப்பட்டிருந்தாலும், அது காலத்தோடு செய்யப்படவில்லை. இது ஆரம்ப காலத்தில் ஏற்படக்கூடிய சிரமமாக இருக்கலாம். இருந்தாலும், திட்ட மிட்டு, சாருபடி ஆரம்பக்காலத்தில் கடன் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என் உரையை முடிக் கிறேன்.

* **Sri S. RAMALINGA PADAYACHI**: சட்ட மன்றத் தற் காலிகத் தலைவர் அவர்களே, நமது மாநில கவர்னர் அவர்கள் நிகழ்த்திய உரையை ஆதரித்துச் சில வார்த்தைகள் நான் சொல்ல விரும்புகிறேன். 13 ஆண்டுகளுக்கு முன் நமது தேசத்தை ஆண்ட மகாராணி அம்மையார் நம் தேசத்திற்கு வருகிறார். நம் நாட்டில் வந்து, நமது அடுத்த சட்டசபைக் கூட்டத்திலே எல்லா அங்கத் தினர்களும் பார்ப்பதற்கான வாய்ப்பு அளித்தமைக்கு கவர்னர் அவர்கள் மகிழ்ச்சியை தெரிவித்திருப்பது 11-30 a.m.

"செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு"

என்ற முறையிலே அமைந்திருக்கிறது. அம்மையார் வரவைப் பற்றிக் குறிப்பிட்டதற்காக இந்தச் சபை மூலமாக நான் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இந்த ஆண்டில் தென் மேற்கு பருவக் காற்று—மழை நன்றாக அமையாவிட்டாலும், அதனால் சில கஷ்டங்கள் ஏற்பட்டிருந் தாலும், வட கிழக்குப் பருவக் காற்று மழை நன்றாக அமைந்து இருக்கிறது. நவம்பர், டிசம்பர், ஜனவரி மாதங்களில் நல்ல மழை பெய்து, எல்லாக் குளங்களிலும் தண்ணீர் நிரம்பி, நஞ்சை நிலங் களெல்லாம் நன்றாக அறுவடை செய்யப்படுவதும், கதிராக இருப்பதும், பூவாக இருப்பதும், பயிர்களாக இருப்பதும் மறு சாகுபடிக்கு வேலை தொடங்கி விவசாயக் காரியங்கள் துரிதமாக நடந்துகொண்டிருப்பதைப் பார்க்கும்போது, மிக்க வளம் பொருந்தி செழுமை ஏற்பட்டிருக்கிறது—

"கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே
எடுப்பதூம் எல்லாம் மழை"

என்றபடி இந்த ஆண்டிலே நன்றாக இருப்பதைப் பார்க்கும்போது மழையினுடைய முன் பாதியதை உடைய பயிர்கள் கெட்டாலுங் கூட, பின் பாதியதை உடைய பயிர்களினால் க்ஷேமநலம் உண்டாகி யிருக்கிறது.

மழை பெய்ததால் விலைவாசி குறைந்திருக்கிறதா என்று சிலர் கேட்கிறார்கள். அறுவடை ஆனபிறகு கிராம மக்கள் வாங்காத நிலைமை ஏற்படும்போது, நகரப் பகுதிகளில் விலைவாசி இறங்கத் தான் செய்யும். அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டிய அவசியம்

[Sri S. Ramalinga Padayachi] [24th January 1961

இல்லை. கட்டாயம் இந்த ஆண்டிலே விலைவாசி குறையத்தான் செய்யும். நல்ல மழை பெய்து எங்கு பார்த்தாலும் ஏரி, குளங்கள் நன்றாக நிரம்பி இருக்கின்றன.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே, 27 கோடி ரூபாய் பெரிய நர்ப்பாசனத்திற்காகவும் எட்டு கோடி ரூபாய் சிறிய நீர்ப் பாசனத் திட்டங்களுக்காகவும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது மிகவும் கம்மியான தொகை என்று நான் கருதுகிறேன். ஏனென்றால், 13 ஆண்டுகளாக எங்கு பார்த்தாலும் ஏரி, குளங்கள பராமரிப்பு செய்யப்படவில்லை. ஏதோ புதிய பாசனங்களில் வேலை நடந்தாலும், பழைய பாசனங்களில் வேலை நடக்கவில்லை. என் தொகுதியில் நூற்றுக்கணக்கான ஏரிகள் எங்கு பார்த்தாலும் தூர் எடுக்கப்படாமல் பழைய பாசனங்கள் எல்லாம் சீர்கேடான நிலையில் இருக்கின்றன. மாநிலம் பூராவும் அதுபோல்தான் இருக்கிறது. ஆகவே, இந்தத் தொகை போதாது. குறைந்த பட்சமாக இன்னும் முப்பது கோடிக்கு அதிகமாக தொகை ஒதுக்கினால்தான் நல்லமுறையில் சிறிய பாசனங்கள் எல்லாம் செப்பனிடப்பட முடியும் என்று இந்தச் சபைக்கு எடுத்துக்காட்ட ஆசைப்படுகிறேன்.

என் தொகுதியில் குறிப்பாக நக்கம்பாடி ஏரி, குழுமூர் ஏரி, கீழ்முத்தூர் ஏரி இம்மூன்று ஏரிகளைப்பற்றி பல காலமாக இந்தச் சபையில் சொல்லியிருக்கிறோம். நீர்ப்பாசன கமிட்டி மூலமாகவும் அதற்கு பின் ஏற்பட்ட ஜில்லா டெவலப்மெண்ட் கவுன்சில் மூலமாகவும் எடுத்துக் காட்டியிருக்கிறேன். ப்ரோக்ரெஸ் ரிப்போர்ட்டில் ஏதோ சொல்லப்படுகிறது. 'நக்கம்பாடி ஏரிக்கு 82 ஆயிரம் ரூபாய், குழுமூர் ஏரிக்கு 84 ஆயிரம் ரூபாய்' என்று அந்தக் கூட்டத்தில் படிக்கப்பட்டது. நடைமுறையிலே எதுவும் காணப்படவில்லை. அதற்கு பின் என்ன ஆகிறது? 1958-ஆம் ஆண்டிலும் இம்மாதிரி ரிப்போர்ட் வாசித்தார்கள். அதற்குப் பின் சட்ட மன்றத்தில் கேள்வி எழுப்பப்பட்டது. அங்கே டெவலப் மென்ட் கமிட்டியிலே கேட்டபோது, "கலெக்டரிடமிருந்து இந்த ஏரி சம்பந்தமான ரிப்போர்ட்டுக்காக அனுப்பப்பட்டிருக்கிறது' என்று சொல்லப்படுகிறது.

அதற்குப் பிறகு எஸ்.எம்.ஐ.பி. எக்ஸிக்யூடிவ் இன்ஜினீர் அவர்கள் நக்கம்பட்டி ஏரிக்கு சென்ற ஆண்டு ஏப்ரல் மாதம் வந்து, 'அது மராமத்து செய்யத் தகுதியற்றது' என்று சொல்கிறார்.

அதற்குப் பின் ஜில்லா டெவலப்மெண்ட் கவுன்சிலில் இதைப் பிரேரேபிக்கும்போது, 'டெபுடி கலெக்டரிடமிருந்து அரசாங்கத் திற்கு அனுப்பப்பட்டிருக்கிறது' என்று கலெக்டர் சொல்கிறார். இது எப்படியிருக்கிறது பாருங்கள். ஏற்கெனவே இன்ஜினீர் வந்து, 110 ஏக்கர் புதிதாக எடுத்துக்கொள்ள முடியும், அதற்கு 82 ஆயிரம் ரூபாய்' என்று இன்ஜினீர் ரிபோர்ட் கொடுத்திருக் கிறார்கள். அதைத் தாசில்தார் அவர்கள் 80 ஏக்கர்தான் பாய முடியும், ஆகையால், செலவழிக்கப்படக்கூடிய 82 ஆயிரம் ரூபாய்

24th January 1961] [Sri S. Ramalinga Padayachi]

அதிகமாக இருப்பதால், அந்த ஏரி கைவிடப்படும்' என்று கலெக்டர் ரிபோர்ட் எழுதி அரசாங்கத்திற்கு அனுப்பியிருப்பதாக எஸ்.ஐ.எம்.பி. இன்ஜினீர் சொல்கிறார். 'அந்த ஏரியின் மூலமாக அதிகமான ஏக்கருக்குப் பாசனம் செய்ய முடியும், 110 ஏக்கருக்குப் பாசனத்திற்கு எடுத்துக்கொள்ள லெவல் சரியாக இருக்கிறது' என்று ரிபோர்ட் கொடுத்திருக்கிறார்.

அதைப் போலவே, 84 ஆயிரம் ரூபாய் செலவில் குழுமூர் ஏரி எடுத்துக் கொள்ளப்படும் என்று சொல்லப்பட்டது. இந்தச் சட்ட மன்றத்தில், அந்தத் தொகுதியில் வந்திருந்த திரு. விஸ்வநாதம் அவர்கள் பல காலமாகச் சொல்லியும் அந்த ஏரிக்கு எந்தவிதமான காரியமும் செய்யப்படவில்லை. இதுபோல் பல ஏரிகளில் பராமரிப்பு செய்யாமல் விடப்பட்டிருக்கின்றன. ஏரிகள் தூர் ஏற்பட்டு, தண்ணீர் தேங்குவது குறைந்து விடுகிறது, விளைச்சலும் குறைவாக இருக்கிறது. இம்மாதிரி ஏரிகளைப் பராமரிப்பு செய்து ஒருமுறை தண்ணீர் பிடித்தால் ஒரு போகம் விளையப் பாசன வசதி ஏற்படும் வகையில் செய்யவேண்டுமென்று சர்க்காரை இந்த மன்றத்தின் மூலமாகக் கேட்டுக்கொள்கிறேன்.

ஆறு வயது பதினொரு வயது வரையிலுள்ள சிறுவர்களுக்குக் கட்டாயக் கல்வி தரப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதை எப்படிச் செய்ய முடியும்? மிகவும் ஏழைகளாக இருப்பவர்கள் தங்களுடைய குழந்தைகளுக்குச் சரிவர சாப்பாடுகூட போட முடியாத நிலையில் எப்படி பிள்ளைகளை பள்ளிக்கு அனுப்ப முடியும்? ஏதோ உச்சி வேளைக்கு ஒரு தடவை பள்ளிக்கூடத்தில் சாப்பாடு போட்டால் போதுமா? போதாது. ஆகவே, மூன்று வேளையும் சர்க்கார் செலவில் சாப்பாடு போட்டால்தான் ஏழை எளிய பிள்ளைகள் படிக்க முடியுமே தவிர, இல்லாவிட்டால் கட்டாயக் கல்வித் திட்டம் என்று சட்டம் போட்டால் ஏழை மக்களுடைய குழந்தை படிக்க முடியாது. பட்டினியாக எப்படிப் பிள்ளைகள் நாள் பூராவும் படிக்க முடியும்? ஆகவே, பள்ளியில் படிக்கும் ஏழை சிறுவர்களுக்கு மூன்று வேளையும் சர்க்கார் செலவில் உணவு அளித்து, கட்டாயக் கல்வித் திட்டத்தை அமுல் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு உரையை முடித்துக் கொள்கின்றேன்.

* **Sri P. JAYARAJ** : மதிப்பிற்குரிய தற்காலிகத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் ஆற்றிய பேருரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை ஆதரிக்கின்றேன். கவர்னர் அவர்கள் சென்ற ஆண்டு நிகழ்த்திய பேருரையில் பருவ மழை சரியாக இல்லாததால், விளைபொருள்கள் அவ்வளவு அதிகமாக உற்பத்தி செய்யப்படவில்லை என்று கூறினார்கள். இவ்வாண்டு உரையில், பருவ மழை சற்று அதிகமாகப் பெய்ததன் காரணமாக விளை பொருள்கள், மற்றும் குடிசைகள் பாதிக்கப்பட்டிருக்கின்றன என்று உரையில் சொல்லியிருக்கிறார்கள். இந்த மழையினால் தஞ்சை ஜில்லாவிலே பெரிய அளவுக்குச் சேதம் ஏற்பட்டிருக்

[Sri P. Jayaraj] [24th January 1961

கிறது. குடிசைகள் நாசமாயின. இன்று மக்கள் அல்லோல கல்லோலமாகக் காட்சியளிக்கிறார்கள். சர்க்கார் ஜரூர் நடவடிக்கை எடுத்து, பாடசாலைகளையும் கோயில்களையும் பொது இடங்களையும் திறந்துவைத்து மக்களுக்குப் பாதுகாப்பு அளித்தார்கள். அந்தச் சமயத்தில் சர்க்கார் தீவிரமாக நிவாரண வேலைகளை எடுத்துக்கொண்டார்கள். உடனடியாக மராமத்து இலாகா அமைச்சர் அவர்களும், மின்சார இலாகா அமைச்சர் அவர்களும் நான்கு தாலூகாக்களில் இரண்டு நாட்கள் சுற்றுப் பிரயாணம் செய்தார்கள். சுற்றுப்பிரயாணம் செய்து பார்க்கிற நேரத்தில் அநேகமாக ஹரிஜனங்கள்தான் வீடு இழந்து நின்றார்கள். காரணம் கிரமமான முறையில் அவர்கள் முதலிலேயே வீடுகள் சிறிய குடிசையாக இருந்ததால்தான். இப்படி வெள்ளப் பெருக்கினால் அவர்கள் வீடுகள் நாசமானபோது அவர்களுடைய கஷ்டத்தை நிவர்த்திக்க சர்க்கார் எவ்வளவு நிவாரணம் கொடுத்தாலும் போதாமல் இருந்தது. இப்படி அவர்களுக்கு மீட்டும் உதவி செய்கின்றபோதாவது அவர்கள் மேட்டுப்பாங்கான இடங்களில் குடிசை போட்டுக்கொள்ள வசதி செய்துதர வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். தஞ்சை ஜில்லாவில் உள்ள விவசாயப் பெருங்குடி மக்கள் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். பயிர்கள் எல்லாம் பெரும் அளவுக்கு நாசமாகிவிட்டன. ஆகவே எந்த அளவுக்கு நாம் அவர்களுக்கு நிவாரணம் அளித்தாலும் போதாது. முக்கியமாக உரம் வாங்கக் கடன், விதை வாங்கக் கடன் போன்றவைகள் வழங்கினாலும், முன்பு வழங்கப்பட்ட கடன்களானாலும் இன்னும் ஓராண்டு காலத்திற்கு அவர்களிடம் இருந்து வசூல் செய்யக் கூடாது என்பதாக உத்திரவு போடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு வாரச் சாகுபடியாளர்கள், குத்தகைதாரர்கள் இவர்களுக்கும் பாதுகாப்பு அளிக்கவேண்டும். ஒப்புக்கொண்ட குத்தகைப்படி இவ்வாண்டு மிராசுதாரர்களுக்கு குத்தகை அளிக்க முடியாமல் இருக்கும். காரணம் பெருமழையினால் பயிர்கள் நாசமானதுதான். இதற்காக "குத்தகை சரியாக அளக்கவில்லை" என்று மிராசுதாரர்கள் அந்த விவசாயிகளை நிலத்தில் இருந்து வெளியேற்றிவிடாமல் இருக்க தக்க பாதுகாப்பு அளிக்கவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். அதோடு கிஸ்தி வஜா செய்ய கூடிய நிலைமை இருந்தாலும் அப்படிச் செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஹரிஜனங்களுக்கு குடியிருப்பு மனை அவசரமாகச் செய்து தரவேண்டும். அங்கங்கு கிரயமாகச் செய்து கொடுப்பதானாலும் சட்டதிட்டத்திற்குக் கட்டுப்பட்டு செய்ய வேண்டும். மேலும் அங்கே அரசலாற்றில் ஒரு பாலம் கட்ட திட்டம் வகுத்திருக்கிறார்கள். சாங்ஷன் செய்யப்பட்டது எங்கே கட்டுவது என்கிற தகராறினால் கான்சல் செய்யப்பட்டுவிட்டதாகத் தெரிகிறது. எங்கே கட்டுவதாக இருந்தாலும் உடனடியாக அதைக் கட்டுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

24th January 1961] [Sri P. Jayaraj]

ஆடுதுறையில் இருந்து மங்கை நல்லூர் பொறையார் போகிற ரோடைக் கப்பி போடவேண்டுமென்று பன்னிரண்டு ஆண்டுகளாக பொது ஜனங்களிடம் இருந்து மகஜர்களும், கோரிக்கைகளும் வந்து கொண்டிருக்கின்றன. ஆகவே அந்த ரோடை துரிதமாகக் கப்பி போட்டுத் தருவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்காக 291 கோடி ரூபாய் ஒதுக்கியிருப்பது வரவேற்கக் கூடியது. இந்தத் திட்டத்தில் வேளாண்மைக்கு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்கள். கிட்டத் தட்ட 80 கோடி அதற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. இர்ரிகேஷனுக்காக 27 கோடி என்று வேறு ஒதுக்கப்பட்டிருக்கிறது. காலா காலத்தில் ஒதுக்கப்பட்ட பணத்தை ஆங்காங்கே செலவு செய்து. ஆறுகளுக்கு எல்லாம் ரிவிட்மெண்டு போன்றவற்றைக் கட்ட ஏற்பாடு செய்யவேண்டும். செய்தால்தான் வெள்ள காலத்தில் மழை காலத்தில் உடைப்பு எடுத்துக்கொண்டு சேதமாக்காமல் இருக்கும். அப்படிக் கட்டாத காரணத்தினால் எங்கள் பகுதியில் உடைப்பினால் போன ஆண்டு ஆயிரம் எக்கருக்குமேல் சேதமாயிற்று. ஆகவே ஒதுக்கப்பட்ட பணத்தைக் கொண்டு விவசாயிகளுக்கு காலாகாலத்தில் எல்லாவிதமான வசதிகளையும் செய்து தரவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

**SRI M. P. SUBRAMANIAM:** தலைவர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் சட்ட சபையில் உரையாற்றுவது ஒரு சம்பிரதாயமாக ஆகிவிட்டது என்பதை நாம் ஓரளவுக்கு உணர்கிறோம். இதுவரையில் கவர்னர் ஆற்றியிருக்கும்படியான உரைகளில் மிகவும் சுருங்கிய உரை. அளவில் மாத்திரம் அல்ல. அதில் அடங்கியுள்ள சங்கதிகளிலும் மிகச் சுருங்கிய உரை. நம்மை எல்லாம் எதிர்நோக்கியுள்ள பல பிரச்சனைகள் இதில் இடம் பெறவில்லை என்று பல அங்கத்தினர்கள் சுட்டிக்காட்டினார்கள். உதாரணமாகச் சொல்லவேண்டுமானால் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டு வருகிறது. விலைவாசி உயர்ந்துகொண்டே போகிறது என்று மற்றவர்கள் சொல்வது போல இவர்களும் சொல்லியிருக்கிறார்களே தவிர அதைக் கட்டுப்படுத்த என்ன செய்வது என்பதைப்பற்றி பேச்சே இல்லை. நோயாளி ஒருவன் டாக்டரிடம் சென்று வயிற்று வலி என்றால் டாக்டர் மருந்து கொடுக்காமல் ஆமாம் உனக்கு வயிற்றுவலிதான் என்று கூட ஒப்புக்கொள்வதில் என்ன பயன் உடனடியாக விளையும் என்று பார்க்கவேண்டும். அப்படி விலைவாசி உயர்வுப் பிரச்சனைகளுக்கு என்ன பரிகாரம் என்று சர்க்கார் இதிலே ஒன்றும் குறிப்பிடவில்லை என்று சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

அடுத்தபடியாக நான் குறிப்பிட விரும்புவது கவர்னர் பெருமான் உரையில் புதுத் திட்டங்கள்பற்றி ஒன்றும் இல்லையே என்பதுதான். ஒவ்வொரு ஆண்டும் அதில் பல சங்கதிகளை எதிர்

[Sri M. P. Subramaniam] [24th January 1961

பார்ப்பது அவசியம் இல்லை. முதல் ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் என்று முதலிலேயே நாம் திட்டங்களை வகுத்துக்கொண்டுவிடுவதனால் ஒவ்வொரு ஆண்டும் அந்த அந்தத் திட்டத்தில் முதல் ஆண்டு, இரண்டாம் ஆண்டு என்றுதான் செயல்படுகிறோமேயொழிய ஒவ்வொரு ஆண்டும் புதிதாகத் திட்டம்போட என்ன இருக்கிறது என்று சொல்லலாம். அப்படியே இருந்தாலும் நாம் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை முடித்து, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தையும் முடித்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை அமைக்கும் தருவாய் ஆண்டில் இருக்கிறோம். ஆகவே கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களினால் நாட்டில் ஏற்பட்ட வளர்ச்சி என்ன, அபிவிருத்தி என்ன, அவற்றினால் மக்கள் எவ்வளவு தூரம் நன்மை அடைந்திருக்கிறார்கள் இவற்றையெல்லாம் குறிப்பிட்டு இப்போது பேசியிருந்தால் மிக்க பயன் இருக்கும். அதைப்பற்றியும் குறிப்பிடவில்லை.

கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டத்தில் ஏராளமாகப் பணத்தைச் செலவு செய்திருக்கிறோம். அன்னிய நாட்டில் கடன், உள்நாட்டில் கடன், அதிக வரிவிதிப்பு என்று பலவகைகளில் வருவாயைக் கூட்டி ஏராளமாகச் செலவு செய்திருக்கிறோம். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் ஏராளமாக மூலதனம் செய்ய இருக்கிறோம். ஆகவே அதற்குத் தேவைப்படுகிற பணத்தை கடன் மூலமாகப் பெறப் போகிறீர்களா? அல்லது புது வரி விதிப்பை மேற்கொள்ளப்போகிறார்களா என்பதைப்பற்றி ஒன்றும் இந்த உரையில் காணவில்லை. சமூக பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை எவ்வாறு ஒழிக்கப் போகிறார்கள்? வேலை இல்லாத் திண்டாட்டத்தை எவ்வாறு நீக்கப் போகிறார்கள்? தனிப்பட்ட மனிதனுடைய வருமானத்தை எந்த வகையில் உயர்த்தப் போகிறார்கள்? இவைப்பற்றி ஒன்றும் காணப்படவில்லை.

ஆனால் உண்மை நிலை என்னவென்று பார்த்தால் இன்று சமுதாய பொருளாதார ஏற்றத் தாழ்வு சிறிதாவது குறைந்திருக்கிறதா என்றால் குறையவில்லை என்று நான் கூறவில்லை. அரசாங்கமே ஒப்புக்கொண்டிருக்கிறது. அரசாங்க ஆதரவு பெற்ற திட்டக்கமிஷன் அதன் குழுக்கள் மூலம் வெளியிட்டிருக்கிற அறிக்கைகளைப் பார்த்தால் தெரியும், அக்ரிகல்சரல் லேபரின் வருமானம் இன்று எப்படியிருக்கிறது என்பது. அவர்கள் தயாரித்த புள்ளிவிவரத்திலேயே கூறப்பட்டிருக்கிறது, அவர்களுக்கு ஆண்டு ஒன்றுக்கு இருந்த வருமானம், 105 ரூபாயாக இருந்தது இன்று 99 ஆக குறைந்துவிட்டது என்று. இதிலிருந்து என்ன தெரிகிறது? இன்று சமுதாயத்தில் 70 சதவிகிதம் விவசாயத்தில்தான் ஈடுபட்டிருக்கிறார்கள். விவசாயத்தில் அடித்தளத்தில் உள்ளவர்கள் நிலம் இல்லாத விவசாயக் கூலிகள்தான். அவர்கள் வாழ்க்கைத்தரத்தில் சிறிதும் முன்னேற்றம் இல்லாதது மட்டுமல்ல, அவர்கள் வாழ்க்கைத்தரம் கீழே போயிருக்கிறது

24th January 1961] [Sri M. P. Subramaniam]

இதை அந்த அறிக்கையே சுட்டிக் காட்டுகிறது. ஆக பொருளாதார ஏற்றத் தாழ்வு குறைந்திருக்கிறதா என்பதை எல்லோரும் கட்சிக் கண்ணோட்டத்துடனில்லாது பார்க்க வேண்டும். நாட்டிலே விலைவாசி மேலும்மேலும் பெருகி வருகிறது என்று அவர்களே சொல்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் அளிக்கப்பட்டிருக்கிற இந்நேரத்தில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது? மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டமுடிவில்கூட வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னை இன்னும் கடுமையாக இருக்கும் என்று. வேலைவாய்ப்புகளை நாம் அதிகம் ஏற்படுத்துவதைவிட வேலையில்லாதவர்களின் எண்ணிக்கைதான் வளரும், சுமார் 140 லட்சம் பேர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்க முடியாத ஒரு நிலைதான் இருக்கும் என்ற ஒரு நிலை இருக்குமானால் இந்த ஐந்தாண்டுத் திட்டங்களினால் நாட்டு மக்களுக்கு நன்மையிருக்கிறதா என்று தயவுசெய்து சிந்தித்துப் பார்க்க வேண்டும். அடுத்தபடியாக, நான் குறிப்பிட விரும்புவது இந்த நாட்டிலுள்ள சகலப் பிரச்னைகளுக்கு ஐந்தாண்டுத் திட்டங்களை மருந்தாக நம் நாட்டு மக்களுக்கு வைக்கிறோம். இந்தத் திட்டங்கள் உருவாவதற்கு ஜனநாயக வழியில் செயலாற்றுகிற இந்த அரசாங்கத்திற்கு உண்மையான பங்கிருக்கிறதா என்றால் இல்லை என்பதை நான் கூறுவது மட்டுமல்ல, பெரிய அறிஞர்களும், பொருளாதார நிபுணர்களும் கூறியிருக்கிறார்கள். சில நிபுணர்களைக் கொண்ட ஒரு குழுவை வைத்து அவர்கள் சொல்வதே வேத வாக்கு என்றும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை உறுப்பினர்களோ அல்லது பாராளுமன்ற உறுப்பினர்களோ அல்லது அவர்களுக்கு பொறுப்பான அமைச்சரவைகளோ அதில் கிஞ்சித்தேனும் கை வைப்பதற்குக்கூட வழியில்லை என்ற நிலைதான் இருக்கிறது. அதிலுள்ளவர்கள் எல்லோரும் அறிஞர்கள், அவர்கள் எல்லோரும் நிபுணர்கள், அவர்கள் எல்லோரும் திறமைசாலிகள். அவர்கள் நல்ல அனுபவசாலிகள் ஆகவே அவர்கள் சொல்வதை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று வாதம் செய்யலாம். சட்டமன்ற உறுப்பினர்களைவிட, அமைச்சர்களைவிட திறமையுள்ள அதிகாரிகள் பலர் இருக்கிறார்கள். அவர்களை வைத்து ஆட்சி நடத்துவது என்றால் இதைவிட திறமையாக அரசாங்கத்தை நடத்த முடியும், ஆனால் அது ஒரு ஜனநாயக அரசாங்கமாக இருக்க முடியாது. 10,000 கோடி அளவில் செலவு செய்யக் கூடிய திட்டங்கள் வகுப்பதில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்கு அதில் யாதொன்றும் சொல்வதற்கு வாய்ப்பில்லை. அதற்கு எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டு வருவதை பத்திரிகைகளில் பார்க்கிறோம். திட்டக் கமிஷன் என்ன சொல்கிறதோ அதைத்தான் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றதொரு நிலைதான் இன்று இருக்கிறது. மாகாண அரசாங்கங்களின் நிலை எப்படியிருக்கிறதென்றால், மத்திய அரசாங்கத்தின் தயவால்தான் பெரும்பாலான காரியங்களை செய்யவேண்டியிருக்கிறதே தவிர நாம் சுதந்திரமான நிலையில் இருக்கவில்லை, செயலாற்ற முடியவில்லை என்பதைத்தான் நான் இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மத்திய அரசும்,

[Sri M. P. Subramaniam] [24th January 1961

மாகாண அரசாங்கங்களும் சேர்ந்து 6,600 கோடி ரூபாய் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மூலதனம் இட இருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இதில் 3,825 கோடி ராஜ்ய அரசாங்கங்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. 2,775 கோடி மத்திய அரசாங்கத்திலிருந்து நாம் கடனாகப் பெறவேண்டும். ஆக 10, 14 ராஜ்யங்களும் சேர்ந்து ஆயிரம் கோடி அளவிற்குத்தான் அவர்கள் பணத்தை உபயோகிக்க முடியும், ஆகவே, 5,000 கோடிக்கு மேல் மத்திய அரசின் தயவின் பேரில்தான் திட்டங்கள் தீட்ட வேண்டும். நிலைமை இப்படியிருந்தால், நம் கோரிக்கைகளை நிறைவேற்றுவதற்கு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை உறுப்பினர்களுக்கு உரிமையில்லாது போகிறது. இதைத்தான் பல ராஜ்யங்கள் இன்று எதிர்க்கிறார்கள். பல ராஜ்யங்கள் தங்கள் தேவைகளையொட்டி, 400, 500 கோடி வேண்டுமென்று கேட்கிறார்கள். மத்திய அரசாங்கம் நேரிடையாக எடுத்துக் கொள்ளாவிடினும் நாங்களாக எடுத்துக்கொள்ள வாய்ப்பிருக்க வேண்டுமென்று சொல்கிறார்கள். ஆக, மாகாண அரசாங்கங்களும், மத்திய அரசாங்கமும் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளும் நிலைதான் இன்று இருக்கிறது. மத்திய அரசு, திட்ட கமிஷனுக்கே எல்லா அதிகாரங்களும் இருக்க வேண்டுமென்று சொல்கிறது. திட்டங்களை வகுப்பதற்கு, அவைகளை நிர்ணயிப்பதற்குள்ள முழு உரிமையும் திட்டக் கமிஷனுக்கே இருக்கவேண்டுமென்கிறது மத்திய அரசு. நாங்கள்தான் மக்களின் பிரதிநிதிகள், ஆகவே எங்களுக்குத்தான் இதுபற்றிய முழு அதிகாரங்களும் இருக்க வேண்டும் என்று மாகாண அரசாங்கங்கள் கோர மத்திய அரசாங்கத்திற்கும், மாகாண அரசாங்கங்களுக்கும் இன்று ஒரு போராட்டம் ஏற்பட்டிருக்கிறது. பல மாகாணங்களிலும் இன்றைய நிலை எப்படி இருக்கிறதென்றால், இந்தியா முழுவதும் ஒரே நாடு என்ற நிலை கொஞ்ச கொஞ்சமாக சரிந்து வருகிறது, இது ஒரு நல்ல அறிகுறி என்றுதான் நான் நினைக்கிறேன். 1947-ல் இருந்த உணர்வுகூட இன்று இல்லையே என்று பெரிய தலைவர்கள்கூட கூறுகிறார்கள். நமது மாகாணத்தை எடுத்துக் கொண்டால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 291 கோடி தரப்படும் என்ற நம்பிக்கை தெரிவிக்கப்பட்டிருக்கிறது. 400 கோடி நாம் கேட்டிருந்தோம். 290 கோடியில் 190 கோடி மத்திய அரசாங்கத்தின் தயவால் நமக்கு கிடைக்க வேண்டும். ஐந்தாண்டுத் திட்டத்திற்கு பணம் ஒதுக்குவதில், அந்த ராஜ்ய மக்களின் எண்ணிக்கை, அதன் பிற்போக்குத்தன்மை, எந்த அளவு திட்டங்களை நிறைவேற்றுவதற்குள்ள திறமை இருக்கிறது, டெக்னிக்கல் பெர்சனல் எவ்வளவு இருக்கிறது, இவைகளைப் பொறுத்துத்தான் திட்டம் வகுக்கப்படுமென்று நிதி அமைச்சர் அவர்களே குறிப்பிட்டிருக்கிறார்கள். நிதி அமைச்சர் அவர்களே கூறியிருக்கிறார்கள், சென்ற காலத்தில் நம்மைவிட திறமையாக செயலாற்றியவர்கள் இல்லையென்று. அதோடு பிற்போக்கான நிலையில்தான் நாம் இருக்கிறோம் என்று அவர்களே சொல்லியிருக்கிறார்கள். நமக்கு தகுதியும் இருக்கிறது. குறிப்பிட்ட காலத்திற்கு முன்னதாகவே நாம் செலவு செய்திருக்கிறோம்.

24th January 1961] [Sri M. P. Subramaniam]

ஆகவே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நமக்கு இதை விட அதிகமாக உறுதியாக கிடைத்திருக்கவேண்டும். (மணியடிக்கப் பட்டது) முடித்துக் கொள்கிறேன். இறுதியாக ஒன்றே ஒன்று. எல்லோருடைய கவனத்தையும் இன்று ஈன்றிருப்பது சேலத்தில் இரும்பு உருக்குத் தொழிற்சாலை ஒன்று ஏற்பட வேண்டுமென்று சொல்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே நிச்சயமாக கிடைக்கும் என்ற நம்பிக்கை தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் உத்தரவாதம் தரப்படவில்லை. நிதியமைச்சர் அவர்கள் சொல்கிறார்கள், கிழக்கு ஜெர்மனியில் பரிசீலனை செய்ததற்குப் பிறகு அந்தத் திட்டத்தை எடுத்துக் கொள்ள எல்லா முயற்சியும் எடுப்போம் என்று நம்பலாம் என்று சொல்கிறார்கள். ஆனால் மத்திய அரசாங்க அமைச்சர்களும், பிரதம மந்திரியும், பணம் கிடைப்பதைப் பொறுத்திருக்கிறது என்று சொல்கிறார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது குறிப்பிட்டது, பெரும் தொழில்களைத் துவங்கும் பொறுப்பு மத்திய அரசாங்கத்திற்கு இருக்கிறது, மாகாண அரசாங்கங்கள் கவலைப்படவேண்டியதில்லை என்று கூறப்பட்டது. ஆக, இரும்பு உருக்குத் தொழிற்சாலை, அலுமினியம் தொழிற்சாலை, தர்மல் ப்ளான்ட், அணு சக்தியின் உலை இவைகள் எல்லாம் ஏற்படுத்துவது மத்திய அரசின் பொறுப்பு என்று கூறப்பட்டது இப்பொழுது பொய்ப்பிக்கப்பட்டு விட்டபோது, இரும்பு உருக்கு தொழிற்சாலை உறுதியாகக் கிடைக்கும் என்ற நம்பிக்கை ஏற்படுவதற்கு வழியில்லாதிருக்கிறது. ஆகவே, நான் மேற்குறிப்பிட்டிருக்கும் தொழிற்சாலைகளை பெற வழிவகை காணவேண்டுமென்று கேட்டுக் கொண்டு கவர்னர் உரையில் இதுபற்றியொன்றும் இல்லை என்ற வருத்தத்தை தெரிவித்து முடித்துக் கொள்கிறேன்.

* SRI M. C. MUTHUKUMARASWAMY : தாற்காலிக தலைவர் அவர்களே, கவர்னர் அவர்கள் உரையில், கால தேச வர்த்தமானத்தை அறிந்து நாட்டின் நிலையை நன்கு புரிந்து கொண்டு உரையாற்றியிருக்கிறார்கள் என்று நான் மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்கிறேன். சமீபத்தில் பெய்த மழை காரணமாக தஞ்சை ஜில்லாவில் நூற்றுக்கணக்கான கிராமங்கள் இன்று சேதமடைந்திருக்கிறது என்பதை கூறாமல் இருக்க முடியாது.

(Deputy Speaker in the Chair.)

இந்த மழையினால் சேரிகள்தான் அதிகமாக சேதமடைந்திருக்கின்றன, பள்ளத்தில் கட்டப்பட்டதின் காரணமாக அவர்கள் வீடு இழந்திருக்கிறார்கள். சமீபத்தில் பெய்த மழை ஹரிஜனங்களின் பிரிட்டியட்ச நிலையைக் காட்டி விட்டது. மற்ற ஜில்லாக்களைவிட தஞ்சைதான் பிற்போக்கானது என்றுதான் கூறவேண்டும். மற்ற ஜில்லாக்களில் ஹரிஜனங்களுக்கு ஏதோ ஒன்றிரண்டு ஏக்கர் நிலம் சொந்தமாக இருந்தாலும், தஞ்சையில் குடியிருக்கக்கூட மனையின்றி தவிக்கிறார்கள் அங்குள்ள ஹரிஜன மக்கள் என்பதை 12-00 noon.
நான் இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அடுத்தபடியாக, ஹரிஜனங்களுக்கு பிரிட்டிஷார் காலத்திலேயே பஞ்சம் தரிசு நிலங்கள்என்று (Reserved lands for Panchamas) குறிப்பிடப்

[Sri M. C. Muthukumaraswamy] [24th January 1961

பட்டிருக்கிறது. அந்த பஞ்சமி தரிசு நிலங்கள் இன்றைக்கு எந்த நிலையில் இருக்கிறது என்று பார்த்தால் அவைகளை எல்லாம் ஹரிஜனங்கள் அனுபவித்து வருகிறார்கள் என்று சொல்வதற்கில்லை. அந்த நிலையில் அவர்களுக்கு என்று இருந்து வந்த சட்டத்தை மாற்றி அமைத்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. இதை அரசாங்கம் உடனடியாக கவனிக்கவேண்டும் என்று நான் மிகவும் தயவாக கேட்டுக்கொள்கிறேன். இப்போதும்கூட ஹரிஜன மக்கள் புறம்போக்கு நிலங்களை அனுபவித்து வந்தாலும்கூட, அதிலும் குறிப்பாக எட்டு வருடம் பத்து வருடங்கள் என்று அனுபவித்து வந்தாலும்கூட, சில இடங்களில் அவர்கள் அனுபவித்து வருகின்ற இடங்களிலிருந்து அவர்கள் வெளியேற்றப் படுகிறார்கள். இதை நாம் கண்கூடாக பார்க்கிறோம். இதில் உடனடியாக அமைச்சர் அவர்கள் தக்க நடவடிக்கை எடுத்து அதை அடமானம் செய்து கொடுப்பதற்கு முன்வரவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு பல்லாயிரக்கணக்கான ஏக்கர் புறம்போக்கு தரிசு நிலங்களை, உணவு உற்பத்தியை பெருக்க வேண்டும் என்று சொல்லுகின்ற இந்த நோக்கில், இந்த நிலங்களை எல்லாம் ஏழை மக்களுக்கு பிரித்துக்கொடுக்க முன்வரவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஹரிஜனங்களுக்கு மனைக்கட்டுகள் கொடுப்பது, வீடுகள் கட்டிக் கொடுப்பது, நடை பாதைகள் போட்டுக் கொடுப்பது, பம்பு வைப்பது போன்ற இந்த விதமான வேலைகளை தான் செய்து கொடுக்கிறார்களே தவிர பெரிய தொழில் துறையில் அவர்களுக்கு எந்த விதமான வாய்ப்பும் செய்து கொடுத்திருப்ப தாக தெரியவில்லை. இருக்கின்ற பஸ் ரூட்-களை எல்லாம் எடுத்துக் கொண்டால் அவைகள் எல்லாம் ஹரிஜனங்கள் அல்லாதார் கையில் தான் இருக்கின்றன. எத்தனையோ பஸ் பெர்மிட்டுகள் ஹரிஜனங் களுக்கும் கொடுக்கலாம். சட்டத்தில் இதற்கு இடமில்லை என்று ஒதுக்கிவிடுவது அவ்வளவு தர்மமல்ல. அவர்களுக்கும் எந்த விதத்திலாவது பஸ் பெர்மிட்டுகள் கொடுக்க முன்வரவேண்டும். இன்னும் பல விதமான லைஸன்ஸ்கள் இருக்கின்றன. இம்மாதிரிப் பட்ட லைஸன்ஸ்கள் எல்லாம் ஹரிஜன மக்களுக்கும் தாராளமாக கொடுக்க வேண்டும். அப்படி அவர்களுக்கும் வழங்கினால்தான் ஹரிஜனங்கள் முன்னுக்கு வரமுடியும் என்று சொல்ல ஆசைப்படு கிறேன்.

அடுத்தபடியாக, ஹரிஜன் வெல்பார் டிப்பார்ட்மெண்ட் என்று ஒன்றை ஏற்படுத்தி அதன் மூலமாக ஹரிஜன மக்களுக்கு தொண் டாற்றி வருவதாக சொல்லுகிறார்கள். அந்த டிப்பார்ட்மெண்டில் கூட ஹரிஜன மக்களுக்கு போதுமான பிரதிநிதித்துவம் கொடுப்ப தில்லை என்பதை நான் மிக வருத்தத்துடன் தெரிவித்துக்கொள் கிறேன். இன்றைக்கு இருக்கின்ற ஹரிஜன் வெல்பேர் டிப்பார்ட் மெண்டை எடுத்துக்கொண்டால் பெயர் அளவில்தான் ஹரிஜன் என்று இருக்கிறதே தவிர 100-க்கு 85 அல்லது 90 விதம் மற்ற ஜாதி இந்துக்கள்தான் அங்கு வேலை செய்து வருகிறார்கள் என்பதை என்னால் தெரிவிக்காமல் இருக்க முடியவில்லை. அதைப்

24th January 1961] [Sri M. C. Muthukumaraswamy]

போலவே மற்ற இலாக்காக்களை எடுத்துக்கொண்டாலும், கழிந்த 13 வருட காலத்தில் ஹரிஜனங்களுக்கு குறிப்பாக முனிசிபாலிட்டிகளை எடுத்துக்கொண்டால், எங்காவது 10 ஹரிஜனங்களுக்கு உத்யோகம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று திட்டவட்டமாக சொல்ல முடியுமா என்று கேட்கிறேன். எந்த இடத்திற்கு ஹரிஜனங்கள் வேலைக்குப் போனாலும் இடம் காலியில்லை (நோ வேக்கன்ஸி) என்று தான் சொல்லுகிறார்கள். ஆகவே இந்த நிலைமையை மாற்றி அமைத்து அரசாங்கம் நல்லதொரு நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் தஞ்சை ஜில்லாவை, பொறுத்தவரையில் விவசாயப் பிரதேசம் எடுத்துக்கொண்டாலும் அங்கு ஏறக்குறைய ஐந்தாறு மாதங்கள் தான் சாகுபடியில் ஈடுபட்டிருக்கிறார்கள். மற்ற மாதங்களில் எல்லாம் சும்மா இருந்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே அவர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுப்பதற்காக அங்கே ஒரு பெரிய தொழிற்சாலையை ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இப்படி ஒரு தொழிற்சாலையை ஏற்படுத்திக் கொடுக்காவிட்டால் ஆறு மாதங்கள் சாகுபடி வேலைகளை பார்த்து விட்டு பாக்கி ஆறு மாதகாலம் சும்மா இருப்பதின் காரணமாக, அங்குள்ள மக்களின் நிலைமை மிகவும் மோசமாகி பிற்போக்குத் தன்மையை அடைவார்கள் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். அங்கு ஏற்கனவே இரண்டொரு தொழிற்சாலை இருப்பதாக அறிகிறேன். அதோடு நிறுத்திவிடாமல் இன்னும் அதிகமாக தொழிற்சாலைகளை ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* **SRI V. S. ARUNACHALAM**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நமக்கு கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை அதிகமாக ஆதரித்து சில வார்த்தைகள் குறிப்பிட்டு பேச விரும்புகிறேன். இந்த அறிக்கையில் மூன்று முக்கியமான திட்டங்களை குறிப்பிட்டு இவைகள் மூலமாக நாட்டிலுள்ள மக்களுக்கு நன்மை கிடைக்கும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அதில் முக்கியமானது பாசனமாகும். பாசன வசதிக்காக நமக்கு அதிக நிதி ஒதுக்கி சிறு சிறு பாசனங்களையும் எடுத்து விவசாய மக்களுக்கு தண்ணீர் வசதி செய்து கொடுப்பதற்குத் தகுந்த நிதியை ஒதுக்கியிருப்பதைப்பார்த்து நான் மிக மகிழ்ச்சி அடைகிறேன். இதில் சிறு பாசனங்களுக்காக நடவடிக்கை எடுக்கும்போது ஆங்காங்கு அதிகாரிகள் சென்று எந்தெந்த பாசன வசதிகளை உடனடியாக செய்து கொடுக்க வேண்டும், மழை காலங்களில் எந்த கால்வாய்களில் தண்ணீர் சரியாக போகும் என்பதைப்பற்றி எல்லாம் நன்றாக ஆராய்ந்து அதன் படி நடவடிக்கை எடுக்கவேண்டும். அதுதான் இதில் முக்கியமான நோக்கமாய் இருக்கவேண்டும் என்பது என்னுடைய கருத்து. அதில் வேலை செய்யக்கூடிய நேரங்களில் சில சந்தர்ப்பங்களில் ஹரிஜன மக்களுக்கு வேலைகள் எடுத்துக்கொள்ளக்கூடிய வாய்ப்பை கொடுக்க முன் வர வேண்டும். சில ஹரிஜனங்கள் பண

வசதியுள்ளவர்கள் சில வேலைகளை எடுக்க முன் வந்தால், அவர்களுக்கு தகுந்த சொத்துக்கள் இருக்கிறதா, இதை அவர்கள் செய்ய முடியுமா ? என்று எல்லாம் பலவிதமான குறிக்கோள்களை காட்டி அவர்களுடைய கோரிக்கையை புறக்கணித்துவிடுகிறார்கள். ஆகவே ஹரிஜன மக்களில் வசதியுள்ள சிலர் வேலைகளை எடுத்து நடத்தக் கூடியவாய்ப்பு இல்லாமல் போய்விடுகிறது. ஆகவே ஒரு சில ஹரிஜன மக்கள், பண வசதியுள்ளவர்கள் வேலைகளை எடுத்து நடத்துவதற்கு முன் வருவார்கள் என்றால் அவர்களுக்கு எந்த விதமான தடையும் இல்லாமல் வேலைகளை கொடுக்கவேண்டும். அதற்காக அரசாங்கம் வேண்டிய உத்தரவை கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, தொழிற்சாலைகளைப்பற்றி நாம் அதிகமாக கவனம் செலுத்த வேண்டும். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எங்கு பார்த்தாலும் தொழிற்சாலை நிறுவவேண்டும் என்று குறிப்பிட்டிருப்பதைப்பற்றி மிக மகிழ்ச்சி யடைகிறேன். ஆனால் இப்போது தொழிற்சாலை இருக்கும் இடங்களில் வேலை வேண்டும் என்று ஹரிஜன மக்கள், அதிலும் டர்னர் கார்பென்டர், மிஷின் பிட்டர்கள் போன்ற கோர்ஸ்-களுக்கு ஒன்றரை வருடங்கள் பயிற்சி பெற்றதின் பின்னால், வேலை மனுக்களை அனுப்பினால் அவர்களுக்கு வேலையில்லை என்ற பதில் வருவது சகஜமாகிவிட்டது. இவர்களுக்கு எல்லாம் தகுந்த முறையில் எம்ப்ளாய்மென்ட் மூலம் அல்லது ஒரு எண்ணிக்கையைக் குறிப்பிட்டு அதற்கு தகுந்தவாறு இடங்களை ஒதுக்கி கோர்ஸ்-கள் படித்து முடித்த மாணவர்களுக்கு, வேலைகொடுக்க அரசாங்கம் அக்கரை காட்டி, தனிப்பட்டவர்கள் நடத்தும் பாக்டரிகளாய் இருந்தால் அவர்களுக்கு எச்சரிக்கை செய்து இப்படிப்பட்ட ஹரிஜன மக்கள்—தகுதி உடையவர்களா யிருந்தால் அவர்களை பரிசிலனை செய்து கூட எடுத்துக்கொள்ளலாம்—இப்படி பரிசிலனை செய்து பார்த்து அவர்களுக்கு வேலை இல்லை என்ற வருத்தமான வார்த்தைகள் அடங்கிய லெட்டர்களை அனுப்பாமல் அவர்களுக்கு வேலைகள் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஹரிஜன மக்கள் அரசாங்கத்திற்கோ அல்லது மற்றவர்களுக்கோ இடைஞ்சல் இல்லாமல் சில புறம்போக்கு நிலங்களில், ஒரு சென்ட் கூட நிலமில்லாத ஏழை மக்கள், பயிர் செய்துவிட்டால் அதற்காக அதிகமாக தீர்வை, அபராதம் போடுவதோடு, அந்த கிராமத்திலுள்ள மக்கள் இவர்கள் பயிர் செய்வதினால் எந்த விதமான ஆட்சேபனையும் இல்லை என்று சொன்னாலும் கூட—அது மட்டுமல்ல அந்தக் கிராமத்திலுள்ள மக்கள் இவர்களுக்கு கொடுக்க வேண்டியது அவசியம் என்று சொன்னாலும் கூட—சில அதிகாரிகள் ஹரிஜன மக்களை துன்புறுத்தி வருகிறார்கள். இடைஞ்சல் இல்லாத இடங்களில் பயிர் செய்தால் அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்காமல் இருக்குமாறு அதிகாரிகளுக்கு அரசாங்கம் உத்தரவு போடவேண்டும் என்று இந்த சபையின் மூலம் கேட்டுக்கொள்கிறேன். என்னுடைய தொகுதியிலே அநேக ஹரிஜன மக்கள்

24th January 1961] [Sri V. S. Arunachalam]

இப்படிப்பட்ட அல்லலில் மிகவும் கஷ்டப்பட்டார்கள். அப்படிப் பட்ட கஷ்டங்களைத் தீர்த்து அவர்களுக்கு ஆவன செய்யவேண்டு மென்று இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, வீட்டு மனைகள், வீட்டு மனைக்கட்டுகள் வாங்கும் நேரத்தில் மிக மிகத் தாமதம் ஏற்படுகிறது. ஒரு சில இடங்களில் தேன் கூட்டிலே ஈக்கள் எப்படி நிறைந்திருக்கின்றனவோ அதே மாதிரி ஹரிஜனக் காலனிகள் இருந்து கொண்டிருக்கின்றன. இப்படிப்பட்ட இடங்களில் மனைகள் கேட்டால் மிக மிக தாமதம் ஏற்படுகிறது. சட்டப்படி பல முறைகளைக் கையாள வேண்டி யிருக்கிறது. டிஸ்ட்ரிக்ட் வெல்பேர் ஆபீஸர், டிஸ்ட்ரிக்ட் கலெக் டர் அவர்களுக்கு போதிய அதிகாரம் கொடுத்து அவர்கள் மூலமாக அந்த மனைக்கட்டுகளைக் கொடுக்க அரசாங்கம் ஒரு உத்திரவு போடவேண்டும். சீக்கிரமாக தாமதமில்லாமல் மனைக்கட்டுகளை வழங்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்தில் மிகப் பணிவோடு கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI P. K. MOOKIAH THEVAR** : சட்ட சபை அணைத் தலைவர் அவர்களே, நமது மாண்பு மிக்க கவர்னர் அவர்களுடைய உரையில் மக்களுடைய எந்தப் பிரச்னையையும் தீர்க்கக் கூடிய முறையில் திட்டங்களோ, சொற்களோ எதுவும் அமையவில்லை என்பது மிகவும் வருந்தத் தக்கது. இது வழக்கமாக கொடுக்கப்படுகிற அரசாங்கத்துத் தாப்பு அறிக்கையாக வழங்கப்பட்டிருக்கிறதே யொழிய, பெரும் மாறுதல்களைக் கொடுக்கக் கூடியதாக அமைய வில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன். காரணம் என்ன என்றால், நம்முடைய ஸ்டேட்டுக்கு "நோ பிராப்ளம் ஸ்டேட்" என்று பெயர். எதையும் விட்டுக்கொடுத்து, அமைதியான முறை யில் எதையும் சாதிக்கக் கூடியவர்கள் என்று சொல்லப்படக் கூடிய ஸ்டேட். அதைப் பார்க்கும்போது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே 100 கோடி ரூபாயை விட்டுக்கொடுக்கும் அளவுக்கு, ராஜ்யப் புனரமைப்பிலே தமிழ் மக்கள் நிறம்பிய பகுதியாகிய தேவிகுளம், பீர்மேடு பகுதியை விட்டுக்கொடுத்து, பிறகு பம்பை யாறு திட்டத்தை சமீபத்தில் விட்டுக்கொடுத்து, பிறகு சேது சமுத்திரம் திட்டத்தை விட்டுக் கொடுத்து, இந்தப் பகுதி மக்கள் வெளி நாடுகளான சிலோன் முதல் மலேயா, பர்மா போன்ற இடங் களுக்குச் சென்று அங்கு இடம் இல்லாத நிலையில் அவர்கள் அல்ல லுக்கு ஒரு பரிகாரம் தேடும் முறையில் ஒரு திட்டத்தை மூன்றாவது திட்டத்தில் காறுது விட்டுக்கொடுத்த திட்டமாக இருப்பதைப் பார்க்க வருந்தக் கூடியதாக இருக்கிறது. ஏற்கனவே, இங்கு இருக்கக் கூடிய ஆறுகளில் எந்த விதமான புதுத் திட்டத்தையும் போடுவதற்கு வழியில்லை என்று சொல்லப்படுகிறது. அதே நேரத்தில் அப்பர் பெரியாறு திட்டத்தைப் பொருத்த வரையில் அது இன்று இண்டர்-ஸ்டேட் ரிவர் இல்லை என்று கேரள சர்க்கார் சொல்வதாகத் தெரிகிறது. அதையும் நமது சர்க்கார் விட்டுக் கொடுப்பதுபோன்று இருக்கின்றார்கள். நமது சீஃப் என்ஜினீ யரோ அது ஒரு இண்டர்ஸ்டேட் ரிவர் தான் என்று சொல்லியிருக்

[Sri P. K. Mookiah Thevar] [24th January 1961

இருர்கள். எப்படியும் இதைச் செய்தாலொழிய நமக்கு வேறு விமோசனமே கிடையாது. இந்த ஒரு திட்டம் தான் பெரிய திட்டம். இதையும் விட்டுக் கொடுக்கக் கூடாது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

நமது கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையில் முக்கியமாக பிரிட்டிஷ் ராணி அவர்களின் வருகையைக் குறிப்பிட்டு அவர்களுக்கு வரவேற்பு கூறியிருக்கிருர்கள். அந்நிய நாட்டுக் காரர்களுக்கு இயற்கையாகவே பெருமை கொடுக்கக் கூடிய குணம் இந்தியாவிற்கு உண்டு. "இண்டியன் ஹாஸ்பிடாலிட்டி", பண்பாடு மிகவும் பெயர் போனது. நாம் அவர்களுக்குக் கொடுக்கும் ஹாஸ்பிடாலிட்டியில் கால் பங்காவது அவர்கள் நமக்குக் கொடுக்கிருர்களா என்ருல் இல்லை. லட்சக்கணக்கான ரூபாயைச் செலவழித்து, ரத்தினக் கம்பளம் விரித்து ராணியை வரவேற்கத் தயார் செய்து கொண்டிருக்கிறேம். ராணி எந்தத் திசையில் போவார்கள், அந்த திசையெல்லாம் ரோடுகள் போடப்பட்டு சென்னையில் மூன்று மாதங்களுக்கு முன்னலேயே பஸ்கள் எந்த திசையில் போகும் என்று கூடத் தெரியாமல் இருக்கிறது. அந்த அளவுக்கு ஏற்பாடுகள் நடக்கின்றன. அதே நேரத்தில் நமது நாட்டுத் தலைவர்களுக்கும், நாட்டுக்கும் அவர்கள் மதிப்புக் கொடுக்கிருர்களா என்ருல் இல்லை. உதாரணமாக சமீபத்தில் நேரு அவர்கள் யுனைட்டெட் நேஷன்ஸுக்குப் போய் அங்கு பேசிவிட்டு வருகின்ற போது, ஆங்கிலேயருக்குப் பிடிக்காத ஒன்றைப் பேசிவிட்டார் என்று, இங்கிலாந்து தேச விமான நிலையத்தில் வந்தபோது அவரை வரவேற்க அதிகாரிகள் கூடப் போகவில்லை என்று பத்திரிகைகளில் படித்தோம். இரண்டாவது, நேதாஜி அவர்களைக் குறிப்பிட்டு **"Nehru is giving reception to the daughter of India's quisling"** என்று அனிடா போஸைப் பற்றிக் குறிப்பிடும்போது பத்திரிகைகளெல்லாம் நேற்று வரையில் எழுதி வருகின்றன. நாம் மரியாதை கொடுக்கிறேம். ஆனல் அதே நேரத்தில்—வேதனை தருகிற அளவுக்கு—அவர்கள் மரியாதை கொடுக்கின்ருர்களா? வெளி நாட்டுக்காரர்களை வரவேற்கத் தயாராக இருக்கிறேம் நமது தலைவர்களுக்கும், நமது நாட்டுக்கும் அதே முறையில் வரவேற்பு மரியாதை இருக்க வேண்டும் என்பதை வருத்தத்தோடு சொல்லாமல் இருக்க முடியாது.

அதே மாதிரி இன்று ஒரு ஆளும் கட்சி அங்கத்தினர்கள் கூடச் சொன்னர்கள். எதிர்க்கட்சியைச் சேர்ந்த ஆதிமூலம் அவர்கள் அரசாங்கத்தலையீடுப் பற்றிப் பேசியதற்கு பீடி, சிகரெட் என்று மிகவும் தரக்குறைவாகப் பேசினர். வரப்போகின்ற தேர்தல் காரணமாக கட்சியின் தலையீடு, கட்சி அங்கத்தினர்களின் தலையீடு அதிகமாகிவிட்டது. இதைப் பற்றி எனக்குக் கொடுத்திருக்கக் கூடிய 7-8 நிமிஷங்களில் அதிகமாக பேச முடியாது. என்னல் நிறையச் சொல்ல முடியும். உதாரணமாக எங்கள் பகுதியில் வைகையாற்றுத் திட்டம் என்று ஒரு திட்டத்தை போட்டு நிறைவேற்றினர்கள். அதிலே ஆண்டிப்பட்டிக்குப்பக்கத்தில் அணை

போடப்பட்டது. இந்தத் திட்டம் நீண்ட நெடுங்காலமாக போஸ்ட்-வார் ப்ளானில் இருந்தது. இதற்காக 14 கிராமங்களைக் காலி செய்தார்கள். 22 மைல் நீளத்திற்கு, 22,000 எக்கருக்கு உசிலம்பட்டி பகுதியில் பாயும் என்று—இன்றல்ல, நேற்றல்ல—வெகுகாலமாக பேசப்பட்டது. உசிலம்பட்டி பகுதியில் பெருங்காநல்லூர் பகுதி மிகவும் பிற்போக்கான ஒரு பகுதி. இதற்காக வெள்ளைக்காரர்கள் இங்கே இருந்தபோது மூன்று விதத் திட்டங்களை பெருங்காநல்லூரை மையமாகவைத்துப் போட்டார்கள். அதில் ஒரு திட்டம்தான் அணைப்பட்டியிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட கருமங்கலம், வைகை கால்வாய் திட்டம். அதே திட்டத்தில் 22 மைலுக்கு பெருங்காநல்லூர் வரையில் கால்வாய் செல்லும் என்று ஒரு பர்லாங்குக்கு ஒரு கல் வீதம் போட்டு பெருங்காநல்லூரில் கடைசி கல் 4 அடி உயரத்தில் போடப்பட்டது. கால்வாய் வெட்டி தண்ணீர் விடுவதற்காக கால்வாய் வெட்டப்பட்டதில் 17-வது மைல் வரையில் வெட்டப்பட்டிருக்கிறது. 17-வது மைலோடு இது நிறுத்தப்பட்டிருக்கிறது. கால்வாயின் நீளம் 22 மைல் என்று ஐந்தாண்டுத் திட்ட சாதனைகளைப் பற்றிய புத்தகத்தில் போடப்பட்டுள்ளதே, அதில் பாக்கி 5 மைல் எங்கே போயிற்று? என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. அந்த 5 மைல் கால்வாயை மாற்றி தனிப்பட்ட ஒரு சிலருக்கு தண்ணீர் பாயும் அளவுக்கு கால்வாய் திட்டத்தை மாற்றி விட்டார்கள். அரசாங்கத்தில் செல்வாக்கு படைத்தவர்கள், கட்சியில் செல்வாக்கு படைத்தவர்கள் சிலருக்காக இந்தத் திட்டம் மாற்றப்பட்டிருக்கிறது என்று நான் வருத்தத்தோடு சொல்லிக்கொள்கிறேன். சமீபத்தில் அந்தப் பகுதி மக்கள் அதைப் பற்றி அச்சிட்டு அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறார்கள். அதை உடனடியாக கவனித்துச் செய்யவேண்டும். ஏனென்றால் ஏற்கனவேயே அங்கு ஒரு அநீதி நடந்து விட்டது. அதாவது திருமங்கலம் பகுதியில் அய்யனார்குளம் பக்தாறு என்ற இடத்தில் ஒரு கால்வாய் வெட்டி தண்ணீர் செல்வதற்கு வழி செய்திருந்தால் உசிலம்பட்டி பகுதிக்குத், தலைகீழாகத் தண்ணீர் பாயும். என்ன சொல்லியிருக்கிறார்கள் என்றால் அந்தப் பகுதி பெரிய மேடாக இருக்கிறது, செலவு அதிகம் ஆகும். ஆகவே இந்தத் திட்டம் முடியாது என்று புறக்கணித்து விட்டதாகச் சொல்லுகிறார்கள். புறக்கணிக்கப்பட்டதோடல்லாமல், ஆளும் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் அந்தப் பகுதிக்குச் சென்று கூட்டங்களைப் போட்டு, "உங்கள் பகுதி எம்.எல்.ஏ. எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர், எங்களுக்கு ஓட்டுப் போட்டிருந்தால் இந்தத் திட்டம் வந்திருக்கும்" என்று சொல்லியிருக்கிறார்கள். ஆயிரம் ரூபாய்க்குமேல் வரியும் வாங்கி இருக்கிறார்கள்.

THE HON. SRI P. KAKKAN: கனம் மூக்கையாத் தேவர் அவர்கள் இந்தச் சபையில் தேர்தல் பிரச்சாரம் செய்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

SRI P. K. MOOKIAH THEVAR: அந்தப் பாடத்தை உங்களிடம் தான் கற்றுக்கொண்டிருக்கிறேன். உயர்ந்த நிலையில் இருக்கக் கூடிய அமைச்சர்கள், உத்தியோகஸ்தர்கள் ஆகியவர்

களுடைய முறையைத் தான் நாங்களும் பின்பற்ற வேண்டியிருக்கிறது. நூற்றுக் கணக்கான வருஷங்களாக வாய்க்கால் வருகிறது என்று ஏங்கிக் கொண்டிருக்கும்போது, பாய்ந்து கொண்டிருந்த நிலத்திற்குக் கூட தண்ணீர் இல்லை என்று சொல்லி விட்டார்கள்.

தனிப்பட்ட ஒருவர் தன் நிலத்திற்கு பாய வேண்டுமென்பதற்காக இரண்டு வருஷங்களாக ஏக்கர் ஒன்றுக்கு 300, 400 ரூபாய் தனிப்பட்ட முறையில் செலவு செய்து பக்குவப்படுத்திய பிறகு, அந்த நிலத்திற்குத் தண்ணீர் இல்லையென்று சொல்கிறார்கள். புதிதாக போடப்பட்ட திட்டத்தைமாற்ற ஒருவருக்காக இடையிலுள்ள நிலங்களை விட்டு அப்பால் உள்ள புஞ்சைகளை 5 மைலும் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள். இதையெல்லாம் பார்க்க வேண்டுமென்பதற்காகத்தான் மந்திரி அவர்கள் இங்கு இருப்பதினாலே சொன்னேனே தவிர, பிரசாரத்திற்காக அல்ல. அப்படி பிரசாரத்திற்கு வேண்டுமானால் அதற்கு வேறு எவ்வளவோ இடங்கள் இருக்கிறதென்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அதேமாதிரி ஒவ்வொரு போலீஸ் ஸ்டேஷனை எடுத்துக் கொண்டாலும் சரி, பி.டி.ஓ. ஆபீசை எடுத்துக் கொண்டாலும் சரி, பஞ்சாயத்து ஆபீசை எடுத்துக் கொண்டாலும் சரி—அங்கெல்லாம் காங்கிரஸ் கட்சியின் தலையீடு இல்லாமல் இல்லை. பஞ்சாயத்து ஆட்சியில் எந்த அரசியல் கட்சியின் தலையீடும் கூடாது என்று மட்டும் பேசப்படுகிறது. ஆனால் இன்று பஞ்சாயத்து ஆட்சியில் காங்கிரஸ் கட்சிதான் செல்வாக்கு செலுத்துவதைப் பார்க்கிறோம். அப்படி தப்பித் தவறி அங்குள்ள மக்கள் செல்வாக்கினால் தனிப்பட்ட முறையிலே ஒருவர் கட்சி சார்பற்ற முறையிலே பிரசிடெண்டாக வந்தாலுங்கூட, அவருக்கு கொடுக்கின்ற முதல் வேலை கதர் சட்டை மாட்டிக் கொள்ள வேண்டுமென்பது தான் (Convertion to Congress) இதைத்தான் முதல் அபிவிருத்தியாகக் கொள்கிறார்கள். இவ்வாறுதான் இன்று பி.டி.ஓ. ஆபீசானாலும், பஞ்சாயத்து ஆபீசானாலும் செய்கின்ற முதல் காங்கிரஸ்கட்சி ஆபீசுகளாகமாறி வருகின்றன. இது ஆச்சரியப்படுவதற்கில்லை. என் சொந்த அனுபவத்தைக் கொண்டு சொல்கிறேன். எங்கு போனாலும், எதிர்கட்சிக்காரன் என்று தெரிந்தால் பேய், பிசாசைப்போல் கருதுகிறார்கள். காங்கிரஸின் இந்த நிலைமை 62 நெருங்க நெருங்க இன்னும் அதிகமாகும் என்ற நிலைதான் இன்று இருக்கிறது. இந்த சந்தர்ப்பத்தில் இவ்வாறெல்லாம் இல்லாமல், நல்லமுறையில் செயல்படும்படி பார்த்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

குறிப்பாக, இந்த வைகைத் திட்டத்தைப் பற்றி குறிப்பிட விரும்புகிறேன். இது ஒரு போராட்டமாக வந்தாலுங்கூட வரலாம். ஆகவே இத்திட்டத்தை எந்த காரணத்தினாலும் பூர்த்தி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

**Sri T. S. SWAMINATHA ODAYAR :** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் உரையை ஆதரித்துப் பேசுகின்ற இந்த நேரத்திலே, என்னுடைய

இரண்டொரு கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். இந்த மாகாணத்தைப் பொறுத்த வரையில் நல்ல முறையில் பல திட்டங்களைச் செய்து, முன்னுக்கு வந்து கொண்டிருக்கிறோம். இன்னும் பல புதிய திட்டங்களையெல்லாம் மூன்றாவது ஐந்தாண்டுத்திட்டத்திலே நிறைவேற்ற இருப்பதை புத்தாண்டில் நமது கவர்னர் பெருமான் நிகழ்த்திய உரையிலிருந்து கேட்டு மகிழ்ச்சி அடையாமல் இருக்கமுடியாது.

பொதுவாக இந்த மாகாணத்தில் விவசாயத்தை முக்கியமாகக் கொண்டிருக்கிறோம். இப்போது விவசாயத்தை மக்கள் நல்ல முறையில் ஊக்கமெடுத்து சாகுபடி செய்து வருகிறார்கள். அவர்களுக்கு உள்ள குறைகளை அமைச்சர் வரும்போது, நேரில் தெரிவித்து, வேண்டிய வசதிகள் பெற்று விவசாயத்தை நல்ல முறையில் நடத்தி வருகிறார்கள். ஆனால், உரவினியோகத்தில் மட்டும் கொஞ்சம் சிரமம் இருந்துகொண்டுதான் வருகிறது. இந்த உரத்தை வினியோகம் செய்வதற்காக, தஞ்சை ஜில்லாவில் கோவாப்ரேடிவ் மார்க்கெட்டிங் பெடரேஷன் என்று ஒன்றை ஏற்படுத்தி, அவர்களே ஸ்டாக்கிஸ்டுகளாகவும் இருந்து வருகிறார்கள். இவர்களிடமிருந்து கிரெடிட் சொஸைடிகளெல்லாம் பணம் கேட்டு, வாங்கி நல்லமுறையில் டீலர்களுக்கும், ரீடெல் வியாபாரிகளுக்கும் வினியோகம் செய்து கொண்டிருந்தது. இப்போது சமீபத்தில் அவர்கள் இதை நீக்கி, தங்களுடைய ஏஜெண்டுகளாக இருந்தால் தான் வினியோகம் செய்யப்படும், டீலர்களாகவும், ரீடெல் வியாபாரிகளாகவும் இருக்கக்கூடாது என்று சொல்கிறார்கள். இதனால் இந்த கிரெடிட் சொஸைடிகள் ரொம்பவும் கஷ்டப்படுகின்றன. சொஸைடியாக இருந்து விற்பனை செய்தால் டன் ஒன்றுக்கு 20 ரூபாய் லாபம் கிடைக்கும். ஆனால் அவர்களுடைய ஏஜெண்டுகளாக இருந்தால் டன் ஒன்றுக்கு 7½ ரூபாய்தான் லாபம் கிடைக்கும். அதல்லாமல் ஏஜெண்டுகளாக இருக்கக் கூடியவர்கள் வேறு யாருடைய உரத்தையும் விற்பனை செய்யக்கூடாது. தனிப்பட்ட முறையில் கிரெடிட் சொஸைடிகளாக இருந்தால், பெடரேஷனில் இருந்தும் உரத்தை வாங்கி விற்கலாம், பாரி போன்ற கம்பெனிகளிடமிருந்தும் உரத்தை வாங்கி விற்கலாம். ஆகவே, இந்த உர வினியோக விஷயத்தில் சற்று கவனம் செலுத்தி, நல்ல முறையில் உரங்கள் கிடைக்க வழி செய்ய வேண்டும். அதோடு, ஜில்லாவை விட்டு வேறு ஜில்லாவிற்கு கள்ளக்கடத்தல் செய்யப்படுவதையும் தவிர்க்க ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

மன்னார்குடி தாலுக்காவில் சி.எம்.பி. வருவதற்கு முன்பு அவ்விடம் நகரத்தில் 10 குளங்கள் இருந்தன. அவைகளுக்கு வடுவூர், மன்னடி ஆகிய ஏரிகளிலிருந்து வாய்க்கால் வழியே 10 குளங்களுக்கும் தண்ணீர் வந்து நிரம்பி, பின்னர் அவை பாசனத்திற்கும் உபயோகப்பட்டு வந்தது. இப்போது சி.எம்.பி. வந்த பிறகு இந்த வாய்க்கால் தண்ணீர் நிறுத்தப்பட்டு, சி.எம்.பி. தண்ணீர் மட்டும்தான் வருகிறது. அதனால் விவசாயத்திற்கு அதிகமாக தண்ணீர் கிடைக்கவில்லை. அதோடு, நகர மக்க

[Sri T. S. Swaminatha Odayar] [24th January 1961

ளுக்கும் குளங்களிலிருந்து போதுமான தண்ணீர் கிடைப்பதில்லை. ஆகவே இரண்டுக்கும் ரொம்பவும் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. ஆகவே பழைய ஏரிகளிலிருந்தே தண்ணீர் வரலாம். அந்த வாய்க்கால் இன்னும் அப்படியே இருக்கிறது. இது பற்றி நகரசபைக்காரர்கள்கூட கூடிய சீக்கிரத்தில் தீர்மானம் போட்டு அனுப்ப இருக்கிறார்கள். ஆகவே இதை பரிசீலனை செய்து, பழைய வாய்க்காலிலிருந்தே தண்ணீர் வரமுடியுமானால், குளங்களிலெல்லாம் காலாகாலத்தில் தண்ணீர் விட முடியும். பயிரும் செய்ய முடியும். ஆகவே இதை உத்தேசித்து, அரசாங்கம் சிறு பாசன திட்டத்தின்கீழ் இதை கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இப்போது இந்த பஞ்சாயத்து வந்தவுடன், சில ஊர்களிலே கோயில், குளத்தையெல்லாம் புறம்போக்கில் சேர்க்கப்பட்டிருப்பதால், குளத்தைக்கூட தனிப்பட்டவர்கள் சுவாதீனப்படுத்திக் கொண்டு வருகிற ஒரு நிலையை இன்று ஏற்பட்டிருக்கிறது. குளங்கள் ஸ்நானம் செய்கின்ற இடம். குளங்கள் தீர்த்தமாகவும் இருக்கிறது. ஆகையால் இதையெல்லாம் கவனித்து, இவைகளுக்கெல்லாம் ஒரு விலக்கு கொடுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

சாலைகள் போடும் வேலையெல்லாம் இப்போது நன்றாக நடந்து வருகிறது. இருந்தாலும் இந்த ரோடு புறம்போக்கு என்ற விஷயத்திலே மட்டும், ஹைவேஸ் டிபார்ட்மெண்டுக்கும், ரெவின்யு டிபார்ட்மெண்டுக்கும் இடையே அடிக்கடி தகராறு இருந்து வருகிறது. அதற்கு இறுதியாக அதிகாரம் யாருக்கு உண்டு என்பதற்கு அரசாங்கம் ஒரு விளக்கம் கொடுக்குமாறு கேட்டுக் கொண்டு, என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **Sri S. SADASIVAM** : கனம் துணைத் தலைவர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரையை வரவேற்றும், என்னுடைய பகுதியிலேயுள்ள ஒரு சில குறைகளையும் இந்த சந்தர்ப்பத்திலே எடுத்துச் சொல்ல ஒரு வாய்ப்பு கொடுத்ததற்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். கவர்னர் அவர்கள் இதற்கு முன்பு நிகழ்த்திய உரையிலே பருவ மழை தவறிவிட்டது என்று குறிப்பிட்டிருந்தார். பருவ மழை தவறிவிட்டதே என்ற அச்சம் ஏற்பட்ட போதிலும், அதற்குப் பின்பு இடைக்காலத்திலே நல்ல மழை பெய்து சுபீட்சமும், செழிப்பும் ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் கண்டு மிகவும் மகிழ்ச்சி யடைந்தோம். ஆனால் என்னைப் பொறுத்தவரையிலே, இந்த கருத்திற்கு மாறுபட்ட ஒரு கருத்தைத்தான் சொல்லக்கூடியவனாக இருக்கிறேன்.

இந்த ஆண்டிலே பருவமழை எங்கள் பகுதியிலே தவறிவிட்டதன் காரணமாக முழு பயிர்களாக உள்ள பண வருமானம் தரக்கூடிய பயிர்கள் காய்ந்து, தீய்ந்து போய்விட்டது. இந்த ஆண்டிற்கான விதை தானியங்கள்கூட கிடைக்காமல் போய் விட்டது. இருப்பினும் பின்பு பெய்த மழையாவது அதிகம்

24th January 1961] [Sri S. Sadasivam]

பெய்ததா என்று பார்த்தாலும்கூட, அதுவும் போதிய அளவுக்குப் பெய்யாத காரணத்தால் குடிதண்ணீர்கூட சரியாக கிடைக்க முடியாத ஒரு நிலையில்தான் நாங்கள் இன்று இருந்து வருகிறோம். அதிகமாக மழை பெய்து சேதம் விளைந்த இடங்களிலெல்லாம், சேதம் ஏற்பட்டதன் காரணமாக அவர்களுக்கு வெள்ள நிவாரணம் அளித்தது போல், எங்களைப் போன்ற பகுதியிலுள்ள மக்களுக்கெல்லாம் பஞ்ச நிவாரண வேலைகள் செய்ய அரசாங்கம் முன்வர வேண்டுமென்று நான் மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

கவர்னர் அவர்களுடைய உரையிலே மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலே முக்கியமாக நாம் இயற்றக்கூடிய சாதனங்களைப் பற்றி மிகச்சுருக்கமாகவும், தெளிவாகவும் சொல்லியிருப்பது குறித்து நான் மகிழ்கிறேன். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலே விவசாயத்திற்கு மிகப் பெரியதொரு முக்கியத்துவம் கொடுத்திருப்பதைக் கண்டு நான் மிகவும் அதை வரவேற்கிறேன். விவசாயத் துறையும், தொழில் துறையும் வளர்ந்தால்தான் நாட்டினுடைய நல்ல எதிர்காலம் இருக்கும் என்பதை உணர்ந்து, விவசாயத்திற்கு நல்லதொரு தொகை ஒதுக்கப்பட்டிருப்பது மிகவும் மகிழ்ச்சிக்குரியது. சென்ற இரண்டாவது ஐந்தாண்டுத திட்டத்திலே பெரிய நீர்ப்பாசன திட்டங்களுக்காக செலவிடப்பட்ட தொகை ரூ. 14½ கோடி. மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலே 27 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதை பார்க்கலாம். ஆனால் இந்த மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலே மிகப் பெரியதொரு திட்டமான பரம்பிக்குளத் திட்டம் சேர்க்கப்பட்டு இருப்பதைப் பார்க்கலாம். அதற்கு மட்டும் 22 கோடி ரூபாய் செலவழிக்கப்படக்கூடிய நிலைமை இருக்கிறது. மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட நகலிலே நடுத்தர பாசன வசதிக்காக பல திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன. அதிலே பார்த்தால் 'ஏ' பிரிவிலே 14 திட்டங்களும் 'பி' பிரிவிலே 8 திட்டங்களும் அடங்கியிருக்கின்றன. அந்தத் திட்டங்கள் அமுலாகக்கூடிய பகுதிகளிலுள்ள மக்கள் அந்தத் திட்டங்களெல்லாம் நிச்சயமாக மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நிறைவேற்றப்படும் என்று அவர்கள் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். ஸ்பெஷல் மைனர் இர்ரிகேஷன் திட்டங்களை நிறைவேற்றுவதற்காக ஒரு டிவிஷனை ஏற்படுத்தி, சர்வே செய்து முடிக்கப்பட்ட அந்த இடங்களுக்கு பாசன வசதிகள் ஏற்படும் என்ற ஒரு சூழ்நிலையை உண்டாக்கக்கூடிய நேரத்தில் இதற்கு ஒதுக்கிய தொகை மிகவும் குறைந்துவிட்டால் இந்தத் திட்டங்களெல்லாம் கைவிடப்படுமோ என்ற அச்சம் ஏற்படுகிறது. முக்கியமாக என்னுடைய தொகுதியைப் பொறுத்தவரையிலே நொய்யல் என்ற திட்டம் மிகவும் சிறந்த ஒரு திட்டம். அது உயர்தர அதிகாரிகள் பாராட்டக்கூடிய ஒரு திட்டமாக அமைந்திருக்கிறது. அந்தத் திட்டத்தை அமுலாக்கினால் சுமார் 25,000 ஏகராவுக்கு இருபோக பாசன வசதி கிடைக்கும். அதற்காக செலவிடக்கூடிய தொகை ரூ. 124 லட்சம் தான். மேல் அதிகாரிகள்கூட இது போன்ற திட்டம் நம் தமிழ் நாட்டிற்கு

2-30 p.m.

[Sri S. Sadasivam] [24th January 1961

இதுவரையிலும் ஏற்பட்டதில்லை என்று கருதுகிறார்கள். ஆகவே, இது போன்ற திட்டங்களை நமது அரசாங்கம் எப்படியாவது நிறைவேற்றிக் கொடுக்கவேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கவர்னர் பெருமான் அவர்களின் உரையில்கூட நாம் எதிர் பார்த்த தொகை குறைந்திருந்தாலுங்கூட நாம் போட்ட திட்டங்கள் படிப்படியாக பிற்காலத்தில் எடுத்து நடத்தப்படும் என்று கூறியிருப்பது கண்டு நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். அந்த முறையில் அரசாங்கம் அதற்கு வேண்டிய வாய்ப்புகளை தேடிக் கொடுக்க வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பரம்பிக்குள திட்டம் நிறைவேற்றும்பொழுது, அது கோவையிலே பல பகுதிகளிலே பாய்கிறது. அப்படி பாயும் பொழுது எங்கள் தாலூகாவாகிய கரூருக்கும் வேண்டும் என்று கேட்கும் நிலையில்தான் இருக்கிறோம். ஆனால் அம்மாதிரி வரக் கூடிய நிலையில் இல்லை என்பதை உணர்ந்து அந்தத் திட்டத்தின் மூலம் ஓரளவு சலுகை எங்களுக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதனுடைய கழிவு நீர் பூராவும் அமரா வதியில் கலக்கிறது. அமராவதியில் கலக்கக்கூடிய நீர் மீண்டும் பல திட்டங்கள் மூலம் அமராவதியில் மேற்கு பகுதியில் உள்ள தாராபுரம், உடுமலைப்பேட்டை தாலூகாக்களுக்கு எடுத்துக் கொள்ளப்படாமல் எங்கள் கரூர் தாலூகாவிற்கு பயன்படும்படிச் செய்யவேண்டும். அப்பொழுதுதான் பரம்பிக்குளத் திட்டத்தின் பலனை நாங்கள் அடைய முடியும். ஆகவே, அரசாங்கம் கரூர் தாலூகாவிற்கு நல்லதோர் திட்டத்தை ஏற்படுத்திக்கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

எங்கள் பகுதியிலே மிகவும் வரட்சையாக இருப்ப தற்குக் காரணம், மழை பெய்தாலும் மழைத் தண்ணீரை தேக்கி வைக்க முடியாமல் இருப்பதினால்தான். ஆகவே ஊற்று இல்லாததன் காரணத்தினால் எங்கள் பிரதேசம் வரண்டு போயிருக் கிறது. அதற்காக ஆங்காங்கு ஓடக்கூடிய சிறு சிறு ஓடைகளை தேக்கி வைத்து ஊற்று அதிகரிக்கும்படிச் செய்தால் கிணறுகளில் தண்ணீர் அதிகமாக ஏற்பட்டு, எங்களுக்கு பாசன வசதி தேடிக் கொள்ள முடியும். அங்கு நடக்கக்கூடிய வட்டார வளர்ச்சித் திட்டத்தின் மூலம் செய்யலாம் என்றால், அதில் ஒரு பகுதி மக்க ளுடைய தொகை வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அந்த அளவுக்கு தொகை போடுவதற்கு அங்கு உள்ள மக்களுக்கு சக்தி இல்லை. ஆகவே, அரசாங்கமே இதை எடுத்துக்கொண்டு, அதற்கு வேண்டிய நிதி உதவி செய்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, எனக்கு பேசுவதற்கு சந்தர்ப்பம் அளித்த தலைவர் அவர்களுக்கு என்னுடைய நன்றியை தெரிவித்துக் கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

* **Sri B. DORAISAMI REDDIAR** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் உரை மிகவும் சுருக்கமாக இருப் பதாக எனக்கு முன்னால் பேசிய நண்பர்கள் சொன்னார்கள்.

24th January 1961] [Sri B. Doraisami Reddiar]

கடுகைத் துளைத்து எழுகடலைப் புகட்டிக் குறுகத்தரித்த குறள், என்ற குறளுக்கு இணங்க மிகவும் சுருக்கமாக அந்த உரை அமைந்திருக்கிறது. விவசாயம் பெரிய அளவுக்கு முற்போக்கு அடைந்திருக்கிறது என்று அதில் குறிப்பிடப்பட்டிருப்பது அதிகமான அளவில் உற்பத்தி ஆகியிருக்கிறது என்று கூறப்பட்டிருப்பது மிகவும் வருத்தமான நிலை என்று எனக்குத் தோன்றுகிறது. விவசாயம் அதிகமாக உற்பத்தி ஆகியிருக்கிறது என்று சொல்லப் பட்டிருப்பது, மழை அதிகமாக பெய்திருக்கிறது, அந்த அளவுக்கு விவசாயம் அதிகமாக உற்பத்தி ஆகியிருக்கும் என்ற அளவில்தான் சொல்லப்பட்டு இருக்கிறது என்று நினைக்கிறேன். மழை மட்டும் அதிகமாக பெய்து விட்டால், விவசாயம் அதிகமாகிவிடும் என்று எண்ணுவதில் சில குறைபாடுகள் இருக்கின்றன. மழை அதிகமாகப் பெய்தாலும்கூட விவசாயிகள் நீர்சாவி என்று சொல்லுவார்கள். காலாகாலத்தில் வேண்டிய மழை பெய்தால்தான் பலன் கிடைக்கும். காலம் தவறி பெரிய மழை பெய்தால் அதை நீர்சாவி என்று சொல்லுவார்கள். அதனால் விளைச்சல், மகசூல் நிச்சயமாகக் குறைந்துவிடும். சென்ற வருஷம் 100 மூட்டை சாகுபடி செய்த ஒரு நிலத்தில் இப்பொழுது 50 மூட்டைதான் சாகுபடி ஆகியிருக்கிறது. நான் இந்த சாகுபடி முறையையும் தெரிந்து கொண்டிருக்கிறேன். வியாபாரம் செய்கிற முறையையும் அறிவேன். சென்ற ஆண்டைவிட இந்த ஆண்டு மிகவும் குறைவாகத்தான் மார்க்கெட்டிற்குத் தானியங்கள் வந்திருக்கின்றன. இதை யாரும் மறுக்க முடியாது. எந்தக் கட்சிக்காரர்களும் அறிவார்கள். அவர்கள் வேண்டுமானால் அவரவர்கள் கட்சிக்குத் தகுந்தமாதிரி பேசிக்கொள்ளலாம். ஆனால் நேர்மையாகப் பேச வேண்டுமானால் இதுதான் உண்மை நிலை. விவசாயிகளுக்குச் சொஸைடிகள் மூலம் உரம் சப்ளை செய்தால் ரொம்பவும் நல்ல படியாக கிடைக்கும் என்ற எண்ணத்தில்தான் தனியார்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த லைசென்ஸ்களை 'கான்ஸல்' செய்து, சொஸைடி மூலம் உரங்களை வினியோகம் செய்வதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆனால் பெரிய தனவந்தர்களுக்குத்தான், அந்த ஊரில் உள்ள பிரமுகர்களுக்குத்தான் உரம் கிடைக்கிறது. சிறிய விவசாயிகளுக்கு உரம் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. ஊரில் பெரியவர்களோடு தொடர்பு இல்லாதவர்களுக்கு உரம் கிடைப்பதில்லை என்று புகார்கள் வந்து கொண்டிருக்கின்றன. சென்ற ஆண்டு மூட்டை 25 ரூபாய் விற்ற கிச்சிலிச் சம்பா நெல், மகசூல் வருகிற இக்காலத்தில் புதுநெல் 32 ரூபாய் விற்கிறது. பழைய நெல் வேண்டுமானால் ரூ. 40. துவரம்பருப்பு படி ரூ. 1-8-0. கடலைப்பருப்பு ரூ. 1-8-0 அல்லது ரூ. 2-0-0. அந்த அளவில் மார்க்கெட் இருக்கிறது. இதற்கு முன்பு பேசிய நண்பர் ஒருவர் பணக்காரர்கள்தான் அதிகமாக வாங்குகிறார்கள், ஏழைப்பட்டவர்களுக்குக் கிடைப்பதில்லை என்று சொன்னார்கள். பணக்காரர்கள் தங்கம், வெள்ளி, வைரம், வைடூரியம், மாணிக்கம், கோமேதகம் இவைகளை வேண்டுமானால் வாங்கி வைத்துக்கொள்ளலாம். தானியங்களை வாங்கிச் சேர்த்து வைத்தால், அதனால் என்ன பயன் படும்? மாதக்கணக்கில் நிற்கும், அவ்வளவுதான். நமது நாட்டில்

[Sri B. Doraisami Reddiar] [24th January 1961

விவசாயம் என்றால் ஒரு பிற்போக்கான தொழில் என்ற எண்ணம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. ஏதாவது 25 ரூபாய் சம்பளம் கிடைத்தால் போதும் என்று சொல்லக்கூடிய அளவில் இருக்கிறது. பழைய காலத்தில் "கோழி மேய்க்கிறது என்றாலும் கம்பெனியில் வேலை செய்யவேண்டும்" என்று சொல்லுவார்கள். அதுபோல கிராமத்தில் இருக்கக்கூடிய ஜனங்கள் நகரத்திற்குக் குடியேறி சுகவாழ்வு வாழவேண்டும் என்று நினைப்பவர்களாக இருப்பதால், விவசாயத் தொழில் பிற்போக்கு அடைந்திருக்கிறது. விவசாயம் முற்போக்கு அடைந்து உற்பத்தி அதிகமாக வேண்டுமானால், மக்கள் அதில் அதிகமாக சிரத்தையோடு ஈடுபட வேண்டும். எனக்குப் பேசுவதற்கு 8 நிமிஷங்கள்தான் இருக்கிறது. கொடுத்துவைத்த நண்பர்கள் சிலர் சென்ற தினங்களில் 30 நிமிஷங்கள்கூடப் பேசினார்கள். ஆனால் எனக்கு அதில் நான்கில் ஒரு பகுதி 8 நிமிஷங்கள்தான் தரப்பட்டிருக்கிறது. ஆகையால் பல்வேறு விஷயங்களைப்பற்றிப் பேசுவதற்கு அவகாசம் இல்லை. இன்னும் ஒன்றிரண்டு விஷயங்களைமட்டும் பற்றிச் சொல்லி நிறுத்திக்கொள்ளுகிறேன். இன்று சர்க்கார் ஐந்தாண்டுத் திட்டத்திலே பலவிதமான திட்டங்களை நிறைவேற்றி வருகிறார்கள். ஆனால் அபிஷியல்களும், "நான்-அபிஷியல்" மெம்பர்களும் அந்தத் திட்டங்களை எவ்வளவு மட்டமாக்க வேண்டுமோ, அந்த அளவுக்கு மட்டமாக்கி விடுகிறார்கள். அமைச்சர்களும் அதைக் கவனித்து, போட்ட திட்டங்கள் மட்டமாகாத அளவுக்குப் பார்த்துக்கொண்டிருந்தபோதிலும், நம் நாட்டிலுள்ளவர்கள் அவைகளை மட்டத்துக் கொண்டு வருகிறார்கள். ஆகவே, அரசாங்கம் செய்யும் திட்டங்கள் சரியான முறையில் இயங்குகிறது என்று பேசுவதில் என்ன நியாயம் இருக்கிறது ?

அடுத்தபடியாக பஸ் ஸர்வீஸை எடுத்துக்கொண்டால், தனியார் நடத்தும் பஸ் சர்வீஸிலே "ஓவர் லோடு" போடக் கூடாது. ஒரு டிக்கட் ஓவர் லோடு போட்டாலும் லைசென்சு ரத்தாகிவிடும். டவுனுக்கு வந்தாலும் ஓவர் லோடு ஏற்றக்கூடாது. ஆனால், அரசாங்கம் நடத்தும் சென்னை நகர பஸ்ஸிலே, "பிரஸ் மெஷினி"-லே போட்டு "பிரஸ்" பண்ணுகிற மாதிரி எவ்வளவு பேர் வேண்டுமானாலும் ஏறலாம். (சிரிப்பு.) "பெண் பால்" ஏறிவிட்டால் சிலர் இடம் கொடுத்து விடுகிறார்கள். ஆனால் வேறு சிலர், சம உரிமை பேசுகிறவர்கள், அவர்களும் நிற்கவேண்டு மென்று நினைத்து, ஒருவரோடொருவர் ரொட்டி மாதிரி ஒட்டிக் கொண்டு நிற்கிறார்கள் (சிரிப்பு). இந்தமாதிரி நிலையில் திருப்பதிக்குக்கூடப் போகவேண்டியதில்லை. காசிக்குத்தான் போகவேண்டும். ஒரு பஸ்ஸிலே ஒரு குழந்தை ஏறிற்று. மிலிடரி உடை போட்டுக்கொண்டு ஒருவன் ஏறினான். குழந்தையின் கால் மீது அவனது பூட்ஸ் கால் படவே, நகம் அடியோடு போய் விட்டது. ஏதோ 10 பேர் அல்லது 15 பேர் என்று ஏற்றினாலும் தொலைந்து போகிறது. ஆனால் 50 பேர், 75 பேர் என்று ஏற்றி, பிரஸ் மெஷின் மாதிரி ஆட்களை அடைத்துப்

24th January 1961] [Sri B. Doraisami Reddiar]

போடுவது அவ்வளவு நன்றாக இல்லை. சம்பந்தப்பட்ட அமைச்சர் இங்கே இல்லை. இப்பொழுது சபையில் இருக்கிற மாராமத்து இலாகா அமைச்சருக்கும் தெரியும் என்று நினைக்கிறேன். தெரியாதவர்களே இருக்கமுடியாது.

**THE HON. SRI P. KAKKAN:** ஓவர்லோடு போடக்கூடாது என்பதுதான் அரசாங்கத்தினுடைய கட்டளை. அங்கத்தினர் வசிக்கும் பகுதியில் எப்படியிருக்கிறதோ என்னமோ.

**SRI B. DORAISAMI REDDIAR:** அரசாங்கம் நடத்துகிற பஸ்களைத்தான் நான் குறிப்பிடுகிறேன். அதாவது "ஸிட்டி பஸ்" என்று சொல்லுகிறார்களே, அதைப்பற்றித்தான் பேசுகிறேன் (சிரிப்பு). அமைச்சரும் நானும் காரிலேயோ, டாக்சியிலேயோ போகிறோம். ஆனால் ஏழை எளியவர்களின் கதி என்ன? நேரம் ஆகிக்கொண்டிருக்கிறது. கடைசியில்தான் எனக்குச் சந்தர்ப்பம் கொடுத்திருக்கிறார்கள். எட்டு நிமிடத்திற்குள்ளே எல்லாவற்றையும் பேசவேண்டும். "வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது" என்று சொல்லுகிறார்களே, அதைப்பற்றி நான் யோசனை பண்ணிப் பார்த்தேன். செய்யாறு, போளூர், ஆரணி தாலூகாக்கள் தேய்கின்றன. ரெவின்யூ அமைச்சருடைய மாவட்டத்தைச் சேர்ந்த பகுதிகள். ஆரணி தாலூகாவிலே ஒரு லட்ச ரூபாய்க்கு ஜாகிரைச் சேர்ந்த ஒரு கட்டிடத்தை வாங்கினார்கள். அந்தக் கட்டிடத்தைச் சுண்ணாம்பு அடிப்பதற்கு நாலில் ஒரு பங்கு செலவாகும். அங்கே கிராம சேவகர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. மொத்தம் 60 பேர்கள் இருக்கிறார்கள். டெபுடி ஸ்பீக்கர் அவர்கள் அரக்கோணம் தாலூகாவைச் சேர்ந்தவர். அங்கே ஒரு "ஏரோடிரோம்" கட்டி, சிலர் கண்டிராக்ட் எடுத்துச் சம்பாதித்து விட்டார்கள். வேலூரிலும் பரவாயில்லை. வந்தவாசியில் ஒரு நூல் ஆலை வரப்போகிறது என்று சொல்லுகிறார்கள். வருமோ, வராதோ. போகப்போகத்தான் தெரியும் (சிரிப்பு). குடியாத்தத்திலும் பரவாயில்லை. திருப்பத்தூர் தாலூகாவில் நெல் பயிரிடுவது கஷ்டம். "ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்டிரீஸ்", "லார்ஜ் ஸ்கேல் இண்டஸ்டிரீஸ்" என்று சொல்லுகிறார்கள். தொழிற்பேட்டைகளை நடத்துகிறார்கள். கனரகத் தொழிலுக்கு முதலிலே அரக்கோணத்திலே இடம் பார்த்தார்கள். அங்கே 100 எக்கரா நிலம் இருக்கிறது. அதை விட்டுவிட்டுத் தஞ்சாவூர் ஜில்லாவுக்குப் போய்விட்டார்கள். ஆரணியில் ஒரு தொழிற்பேட்டையை ஏற்படுத்தினால் என்ன? ரெயில்வே ஸ்டேஷன் இருக்கிறது. பிளாட்பாரம் இல்லாத ஊர் என்று சொல்லுகிறார்கள். பிளாட்பாரம் இல்லாமல் இருந்தாலும், முன்னேற்றம் அடைவதற்கு ஏதாவது ஒரு "பாரம்" இருந்தால் போதும். (சிரிப்பு). எனக்குக்கூட 200 எக்கரா சொந்தமாக இருக்கிறது. ஒரு மாட்டுப்பண்ணை வைத்தால் நன்றாக இருக்கும். எஸ். வி. நகரத்தில் தண்ணீர் வசதி இருக்கிறது. ஒரு மில்லோ, காலேஜோ ஏற்படுத்தாமல், கிராம சேவகர்களுக்குப் பயிற்சி அளிக்கிறார்கள். கிராம சேவகிகள் 40 வயதுக்கு மேற்பட்டு இருந்தால் தேவலை. சேவகர்களுக்கு ஏந்த

[Sri B. Doraisami Reddiar] [24th January 1961

வயது வேண்டுமானாலும் இருக்கலாம் (சிரிப்பு). நான்கூட ஒரு துவக்க விழாவுக்குப் போயிருந்தேன். சிறு வயதுப் பெண்கள் தனியாக கிராமங்களுக்குப் போகமுடியாது. நாற்பது வயதுக்கு மேல்பட்டு இருப்பவர்களை நியமிக்கலாம். குழந்தை பெறாத குழந்தைகளுக்கு என்ன அனுபவம் இருக்கும்? (சிரிப்பு). ஆகவே, 40 வயதுக்கு மேற்பட்ட பெண்களைத்தான் கிராம சேவகிகளாக வைக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டு, முடித்துக் கொள்கிறேன்.

* SRIMATHI T. N. ANANDANAYAKI : உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் உரைக்கு நன்றி தெரிவிக்கும் முகத்தான் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். முதலிலே, பருவ மழையைப் பற்றிக் குறிப்பிட்டு, குறிப்பாக சென்னை நகரில் மழை அதிகமாகப் பெய்து, சேரிவாழ் மக்களுக்கும், மற்றவர்களுக்கும் பல தொல்லைகள் கொடுத்தது என்றும், இருந்த போதிலும் பல பேர்கள் உதவி செய்ததாகவும் அவர்களைப் பாராட்டியும் இருக்கிறார்கள். நகரப் பிரதிநிதி என்ற காரணத்தினாலே, இம்மாதிரி மழையினால், பாதிக்கப்பட்ட மக்களுடைய பிரச்னைகள் இனிமேல் திரும்பவும் வராதபடி தடுக்க நாம் தகுந்த நடவடிக்கைகள் எடுக்கக் கடமைப் பட்டிருக்கிறோம். காரணம் என்னவென்றால், இந்த மழையினால் பாதிக்கப்பட்ட சேரிகளெல்லாம் மிகத் தாழ்ந்த இடங்களிலே கால்வாய்களுக்கும், குட்டை குளங்களுக்கும் பக்கத்திலே இருந்ததினால், பல மக்கள் அவதிக்கு உள்ளாகியிருக்கிறார்கள். இந்த இடங்களையெல்லாம் "ஸ்லம் க்ளியரன்ஸ் ஸ்கீம்"-இன் கீழ் கொண்டு வந்து சீர்படுத்த வேண்டுமென்றும், சிறு சிறு குடிசைப் பகுதிகளையெல்லாம் நல்ல முறையில் சீர்திருத்த வேண்டும் என்றும் ஒரு திட்டத்தை ஐந்தாண்டுகளுக்கு முன்னால், கார்ப்பொரேஷன் சமர்ப்பித்தது. நமது அரசாங்கமும் அதை ஒத்துக்கொண்டது. மத்திய அரசாங்கம் பணம் தருகிறது. 1956-57-ல் என்னுடைய தொகுதியிலே, அப்பொழுது மத்திய மந்திரியாக இருந்த ஸ்ரீ டி. டி. கே. அவர்கள் சேரிகளின் சீர்திருத்தத்திற்காக அஸ்திவாரக் கல் நாட்டினார்கள். அப்புறம் மிகவும் புரட்சிகரமாகப் புகுந்த கட்சி அதைப்பற்றி கவனிக்காமல் இருந்து வருவது மிகவும் வருந்தத் தக்கது. சேரிகள் சீர்திருத்தம் என்று பல கோடி ரூபாய்கள் செலவு செய்தும்கூட கூவத்திற்கு வடக்கேயுள்ள பகுதிகளை கார்ப்பொரேஷனே நேரடியாகச் செய்ய வேண்டும் என்று சொல்லியும்கூட, காங்கிரஸ்காரர்களைக் காட்டிலும் துரிதமாக வேலைசெய்யும் திறமை படைத்தவர்களென்று வாயார தங்களைத் தாங்களே புகழக்கூடிய கட்சி இந்த வெள்ளத்தின் விளைவுகளை நேரில் பார்த்திருந்தால், அது பதட்டத்தைத் தந்திருக்கும். அந்த முறையிலே கவனம் செலுத்தாமல் இருந்ததினால், சேரிகளெல்லாம் அன்றைக்கு இருந்த நிலைமையைக் காட்டிலும் இன்றைக்கு மிகவும் மோசமான நிலையில் இருக்கின்றன. வேலை செய்யக்கூடிய விறுவிறுப்பு இல்லாமல் போனாலும், ஏதோ கொடுத்த சோற்றையும், துணியையும்கூட கட்சி பிரசாரத்திற்காக வைத்துக்கொண்டு, மூட்டையை வீடு வீடாகத் தூக்கிக்கொண்டு

24th January 1961] [Srimathi T. N. Anandanayaki]

மக்களை தவறான பாதையில் இழுத்துச் சென்றார்களே தவிர, அந்தப் பிரச்னையிலே சரியான அக்கரை காட்டவில்லை என்பதை நான் சொல்லமுடியும். அதுவும் அல்லாமல், பாதிக்கப் பட்ட மக்களுக்கு கொடுக்கப்பட்ட சலுகைகளை பலபேர் பல வகைகளிலே கொடுத்ததினால், யாருக்குப் போய்ச் சேர வேண்டுமோ அவருக்குப் போய்ச் சேரவில்லை என்பதையும் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். செஞ்சுலுவைச் சங்கம், தன்னிச்சையாக ஏதோ நிவாரண வேலை செய்துகொண்டி ருந்தது. ஒரு புறம் கார்ப்பொரேஷன் தன்னிச்சையாக செய்து கொண்டிருந்தது. சில செய்தித்தாள்களில் பார்த்தேன், கொடுக் கப்பட்ட போர்வைகளை அங்கத்தினர்களே போர்த்திக்கொண் டார்களோ என்னமோ, போய்ச்சேர வேண்டியவர்களுக்குப் போய்ச்சேரவில்லை, என்று செய்தித்தாளில் பார்த்ததுதான். கொஞ்ச நஞ்சம் கலெக்டர் நிவாரணம் கொடுத்ததையும் பலசட்ட திட்டங்களுக்கு உட்பட்டு கொடுக்கவேண்டியிருந்தது. குடிசை முழுவதும் போய் இருந்தால் ரூ. 30-ம், ஒரு பக்கம் சுவர் போயிருந்தால் ரூ. 10-ம், இரண்டு பக்கம் சுவர் போயிருந்தால் ரூ. 20-ம் கொடுத்தார்கள். நாங்கள் குடிசை குடிசையாகச் சென்று கணக்கெடுத்தோம். நாங்கள் கொடுத்த கணக்கை ஏற்றுக் கொள்ளாமல், ரெவின்யூ இன்ஸ்பெக்டரை அனுப்பித்தார்கள். அவர் வீட்டுக்கு வெளியே நின்றே நாங்கள் முப்பது என்று கொடுத்ததை, மூன்று என்று எழுதிக் கொடுத்துவிட்டார். இனிமேல் இப்படிப்பட்ட நெருக் கடியான சமயங்களிலே, நிவாரணம் அளிக்கும்போது, சர்க்கார் எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து, (They must pool all the agencies together) இஷ்டப்படி அவரவர்களுடைய நோக்கத் திற்கு விட்டுவிடாமல், அரசாங்கத்தின் பொறுப்பிலேயே, யார் யாருக்கு உதவி போய்ச் சேரவேண்டுமோ அவர்களுக்கு போய்ச் சேரும்படி செய்யவேண்டும். ப்ரைவேட் ஏஜென்ஸிகளில் நல்ல மனப்பான்மை படைத்தவர்கள் எவ்வளவோ பேர்கள் இருக்கி றார்கள். அவர்களும் இந்த வெள்ள நிவாரணத்திற்கு இயன்ற வரை உதவி புரிந்திருக்கிறார்கள். ஆகவே, சர்க்கார் கொடுப்பது, கார்ப்பொரேஷன் கொடுப்பது, தனிப்பட்டவர்கள் கொடுப்பது, இவற்றையெல்லாம் சேர்த்து, ஒழுங்கான முறையில் விநியோகிப் பார்களேயானால், அது சாலச் சிறந்ததாக இருக்கும்.

சேரிகளை சீர்படுத்த வேண்டியது மிகமிக அவசியம். சென்னை நகரில் குட்டை, குளங்களுக்குப் பக்கத்தில், உள்ள சேரிகள் அவல நிலையில் அதிக நாட்களுக்கு நீடித்திருக்குமேயானால், அது நமக்கும் நல்லதல்ல, மக்களுக்கும் நல்லதல்ல. ஆகையால், கவர்னர் பெருமான் அவர்கள், இவ்வளவு அக்கரை செலுத்தி யிருக்கும்பொழுது, இன்னும் கொஞ்சம் அக்கரை செலுத்தி, துரிதமாக சேரிகளைச் சீர்படுத்த வழிவகை செய்யவேண்டும்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 100 கோடி குறைந்து விட்டதேயென்று பலர் எள்ளி நகையாடலாம். இரண்டாவது திட்டத்தில் ஒதுக்கிய பணத்தைக் காட்டிலும், அதிகம் செலவு செய்திருக்கிறோம். மத்திய அரசாங்கம் கொடுக்க முன்

[Srimathi T. N. Anandhanayaki] [24th January 1961

வந்தார்கள். முட்டுக் கட்டை போடவில்லை. அதுபோன்று, மூன்றாவது திட்டத்திலும், கொடுத்த பணத்தை வெகு சீக்கிரத்தில் செலவழித்து திட்டங்களை நிறைவேற்றுவோமேயானால், கட்டாயமாக இன்னும் சில திட்டங்களை நாம் நிறைவேற்ற முடியும். செயல் திறமை பெற்றிருந்தால்தான் நாம் அதிகமான பணத்தை மத்திய அரசாங்கத்தினிடமிருந்து பெற்று திட்டங்களை முழுமையாக நிறைவேற்றி முன்னேற முடியும்.

மின்சார அபிவிருத்திக்கு நாம் முதலிடம் கொடுத்திருக்கிறோம். நம்முடைய ராஜ்யத்திலே, மின்சாரம் மின் வேகத்தில் போகின்றது என்பதை யாரும் மறுக்க முடியாது. போட்ட திட்டங்களை முடித்துவிட்டோம். குறித்த காலத்திற்கு முன்பே குந்தா திட்டத்தை முடித்துக்கொண்டு வருகிறோம். வருங் காலத்தில், நம்முடைய பிரச்சினைகளையெல்லாம் தீர்க்க வேண்டுமானால், சீக்கிரத்திலேயே அணு சக்தியினால் இயங்கும் ஒரு பவர் ஸ்டேஷனை நிறுவ வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதே சமயத்தில் ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். மின்சாரத்தை துரிதமாக விஸ்தரிக்கிறோம் என்று நாம் சொல்லி வருகிறோம். சிறு சிறு தொழில்கள் சென்னையைச் சுற்றி வளரும் போது, மின்சாரம் கொடுப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. சிறு தொழில்களை ஆரம்பிக்க வேண்டும், வேலையில்லாதவர்களுக்கு வேலை கொடுக்கவேண்டும், இன்னும் அரசாங்கம் பல உதவிகளைச் செய்யவேண்டும் என்று சொல்லுகிறோம். இவ்வளவு உதவிகள் செய்தும், மின்சாரம் கொடுப்பதற்கு தடை செய்தால், அது நம்முடைய முன்னேற்றத்தையே பாதிப்பதாக இருக்கும். ஆகவே, சிறிய தொழில்கள் ஆரம்பிப்பதற்கு மின்சாரம் கொடுத்து உதவி செய்து நகரைச் சுற்றிலும் பல சிறு தொழில்கள் வளருவதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக நமது தெற்குப் பகுதியிலும் புதிய ரெயில் பாதைகள் நிறுவப்படும் என்ற செய்தியை நான் மகிழ்ச்சியுடன் வரவேற்கின்றேன். தெற்கே அதிக ரெயில்பாதைகள் போடவேண்டுமென்று பண்டித நேருவே வாதாடியிருக்கிறார் என்பதைப் பார்க்கும்போது, நாம் அவருக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். வடக்கு, தெற்கு என்ற உணர்ச்சியை மக்களிடையே பரப்பிக் கொண்டிருக்கும் நிலையிலே, தென் பகுதியிலே ரெயில் பாதைகள் போடவேண்டும் என்று ஒப்புக் கொண்டுள்ள ரெயில்வே மினிஸ்ட்ரிக்கும் நாம் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். அடுத்ததாக மேம்பாலங்கள் கட்டுவதுபற்றி. நான்கு பாலங்கள், மெக்நிக்கல்ஸ் ரோடில் ஒன்று, கோடம்பாக்கத்தில் ஒன்று, இங்கே போர்ட் ஸெண்ட்ஜார்ஜ் பாரிஸ் கார்னரில் ஒன்று, திருவொற்றியூர் பக்கம் ஒன்று, ஆக நான்குக்குத் திட்டம் போட்டார்கள். அதில், மெக்-நிக்கல்ஸ் ரோடு பாலம் முடித்து விட்டார்கள். மற்றவை என்னவாயிற்று என்றே தெரிய மாட்டேன் என்கிறது. நானும் எம்.எல்.ஏ. ஆனதிலிருந்து, மேம்பாலம் பைல் பின்னால் சுற்றுகிறேன். ஏதோ பணம் வரவில்லையென்கிறார்கள்; மீட்டிங் இன்றைக்கு, நாளைக்கு என்கிறார்கள். ஆனால், காரியம் ஆனபாடாக இல்லை. இந்த ஐந்து வருஷ ஆயுளும் முடிந்துபோய்விடும்போல் இருக்கிறது. அந்தத் தொகுதி மெம்பர்

24th January 1961] [Srimathi T. N. Anandanayaki]

என்று நானும் எவ்வளவோ முயன்று பார்க்கிறேன். திருவொற்றியூர் லெவல் கிராஸிங் சென்று பார்த்தால்தான் தெரியும். அங்கு நின்றால், கதவு திறக்க எவ்வளவு நேரம் ஆகிறது, எவ்வளவு சங்கடங்கள் இருக்கின்றன என்று தெரியும். மேம்பாலப் பொருப்பு இருக்கும் பப்ளிக் ஒர்க்ஸ் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன், அதற்கு அஸ்திவாரக் கல்லாவது போடுங்கள், போட்டால் அப்பொழுதாவது வேலை தொடங்கும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தது எஜுகேஷன். கல்விக்குப் பெரிய சலுகை கொடுப்பது வரவேற்கத் தக்கது. அதிலே நாட்டு மக்களுக்கு இன்றியமையாதது. அதே சமயத்தில், ஒன்று சொல்ல விரும்பு கிறேன். பிற்போக்கான மக்களுக்குச் சலுகை மிகக் குறைவு. இன்றைக்கெல்லாம், 35,000 அல்லது 40,000 அப்ளிகேஷன்கள் வந்தால், நாம் கொடுக்கப்போவது 5,000 அல்லது 10,000 பேர் களுக்குத்தான். அதிலும் "எகனமிக் பாக்வர்ட்நஸ்" என்று பார்த்தும், பொருளாதார நிலைமைக்குத் தகுந்தாற்போல் அளிக் கிறோம். வெறும் ஜாதி அடிப்படையில் கொடுப்பதில்லை. எல்லா வற்றையும் சேர்த்துப் பார்ப்பதால், அவர்கள் முன்னேற்றம் சற்று பின்னேதான் போகிறது. ஆகவே, அமைச்சரவர்கள் அக்கரைகொண்டு, அதிகமான பணத்தை ஒதுக்க வேண்டும்; ஒரு சில லட்சம்தான் தேவைப்படும், கோடிக்கணக்கான ரூபாய்கள் வேண்டாம்; ஓரளவு எல்லோருக்கும் அது உதவும். அது சமூகப் பிரச்சினையைத் தீர்க்க ஒரு பெரும் சலுகையாக இருக்கும். இன்று ஒரு பையனுக்கு உதவியளிக்கிறோம் என்றால், அவன் படித்து முன்னுக்கு வந்தால் அது அந்தக் குடும்பத்திற்குப் பயன் படுகிறது. பொருளாதார வசதி ஏற்படுகிறது, பின்னால் அவர் களுக்கு அது சாதகமாகப் போய்விடும். ஆகவே இன்று ஒரு பையனுக்குச் செய்யும் உதவி, ஒரு குடும்பத்திற்கு கொடுக்கும் உதவியாக இருக்கிறது. ஆகவே, அந்த விஷயத்தில், தாராள மாகக் கொடுத்தால், கல்விப் பிரச்சினையை கணிசமான அளவுக்கு தீர்த்ததாக இருக்கும்.

காலம் குறைவாக இருப்பதனால், இதோடு முடிக்கிறேன்.

* **SRI K. ANBAZHAGAN**: சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த ஆண்டு கவர்னர் அவர்கள் நிகழ்த்திய உரையை ஒட்டி சில கருத்துக்களைக்கூற வாய்ப்புப் பெற்றதற்கு மகிழ்ச்சி; கவர்னர் உரைக்காக நன்றி தெரிவிக்க இன்றைய தினம் காரணம் இல்லாவிட்டாலும், உரை நிகழ்த்த வாய்ப்பு அளித்ததற்காக நன்றி தெரிவிக்கிறேன்.

சென்னை மாநிலத்தைப் பொறுத்தவரை, இன்றைய தினம் பருவ மழை பொழிந்து அந்த அளவுக்கு நல்ல விளைச்சல் காணும் சூழ் நிலை இருக்கிறது என்று அமைச்சர் அவர்கள் பேசினாலும், கவர்னர் உரையில் குறிப்பிடப்பட்டு இருந்தாலும், பொதுமக்கள் சென்னை நகரத்தில் மட்டுமல்ல, மாநிலத்தின் பல் வேறு பகுதிகளிலும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அப்படிப் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவும் வகையில் இந்த அரசாங்கம்

[Sri K. Anbazhagan] [24th January 1961

தன்னுடைய கடமையைச் செய்யவில்லை என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன். தஞ்சை மாவட்டம் அதன் கிழ் திசைப் பகுதியில், பெரும்பாலான பகுதிகளில், பயிர்கள் முழுதும் அழிந்து அதனல் விளைச்சல் கெட்டிருக்கிறது. ஓர் அமைச்சர் பேசும்போது, பெரிய அளவில் விளைச்சல் கெட்டிருக்கிறது என்பது உண்மைதான் என்று தெரிவிக்கிருர்; மற்ருெரு அமைச்சர் பேசும்போது, 50, 60 ஏக்கரா நிலம் கெட்டுப் போய் இருக்கும் என்கிருர்; ஒருவேளை, அந்த அமைச்சர் பேசும்போது, தன் சொந்த நிலம் நினைவில் இருந்ததோ என்னவோ என்று கருதுகிறேன். இந்த அளவுக்குப் பெரும் அழிவுகளை, கேடுகளைப்பற்றி அமைச்சர்கள் கூடிக் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வராமலே பேசி இருக்கிருர்களே என்பதைக் குறித்து வருத்தம் தெரிவிக்கிறேன்.

இதே போலத்தான் விலைவாசிகள் ஏறியிருக்கிறது என்ருல், அது எதிர்கட்சிகளின் வெற்றுக் கூச்சல் என்று அமைச்சர்கள் கருதுகிருர்கள். இதிலே நிதியமைச்சர் யார் சொன்னுலும், எளிதில் நம்பாத நல்ல மனம் படைத்தவர்கள். அவரே நேராகக் கடைகளுக்குச் சென்று, வணிகரைக் கேட்டு விலைவாசி ஏற்றத்தைத் தெரிந்து கொண்டார்கள். முறுக்கிய மீசையும், வாட்ட சாட்டமான தோற்றமும் இல்லாமல் இருப்பதால், கடைக்காரர், இவர் அமைச்சர் என்று தெரிந்துகொள்ளாமலே, தான் வெளியில் மற்றவர்கட்கு விற்கும் விலையைச் சொல்லி விட்டார். அதனுல், அதிர்ச்சிக்கு ஆளான அமைச்சர் இரண்டொரு நாள் வெளியில்கூடப் பேசவில்லை என்று கருதுகிறேன். அந்த அளவுக்கு விலைவாசி ஏறியதை நிதியமைச்சர் உணர்ந்திருந்தும், அதைத் தடுக்க என்ன நடவடிக்கை எடுத்தார்கள்? ஏன் நடவடிக்கை எடுக்கவில்லை என்று கேட்கிறேன். விலைவாசி ஏற்றம் அன்பழகனுக்குத் தெரிந்து, நடவடிக்கை எடுக்கவில்லையென்ருல், யாரும் குறையாகக் கருத முடியாது: ஆனல் அமைச்சரவர்களுக்குத் தெரிந்திருந்தும், அவர் நடவடிக்கை எடுக்கவில்லையென்ருல், என்னவென்று கருதுவது? அமைச்சரவர்கள் "நான் அமைச்சராக இருந்தும் பலன் இல்லை" என்ருவது சொல்லட்டும்; "நாங்கள் நாட்டில் ஆட்சி நடத்தினுலும், எங்களுக்கு இந்த உரிமை இல்லாமல் இருக்கிறது" என்ருவது தெரிவிக்கட்டும்; அல்லது அந்த உரிமை இருக்கிற இடத்தைக் கண்டு, அதைப் பெறுவதற்காவது முயற்சிக்க வேண்டும்; அல்லது மக்களோடு சேர்ந்தாவது, ஆழ்ந்த வருத்தத்தை, நிதியமைச்சர் டெல்லி சர்க்காருக்குத் தெரிவிக்க வேண்டும். எதைச் செய்தார் என்று கேட்க விரும்புகிறேன்? உண்மையில் நிதியமைச்சர் மனம் வேதனைப்பட்டிருக்கிறது; இந்த அனுபவம் அவருக்குக் கிடைத்ததற்காக நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்து, இன்றைய தினம், நாட்டிலுள்ள சூழ்நிலை, எதற்கெடுத்தாலும், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றிக் குறிப்பிட்டு அதனல் மக்கள் நிம்மதியாக வாழலாம் என்று அமைச்சர்கள் மகிழ்ச்சியோடு பேசுகிருர்கள். அது ஒருவேளை அடுத்த பொதுத் தேர்தலுக்கு பயன்படும் என்று . தெளிவான

24th January 1961] [Sri K. Anbazhagan]

நம்பிக்கையால் இருக்கலாம், அந்தக் காரணத்தினுல்தான் அதை எடுத்துச் சொல்லுகிருர்கள் என்று ஐயுறுகிறேன். ஆனல், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டமே கூடாது, அப்படித் திட்ட மிட்டு செய்வதே கூடாது என்று கருதும் கட்சியைச் சேர்ந்த வர்கள் அல்ல நாங்கள். போடுகிற இந்தத் திட்டங்களால் தமிழ் நாட்டின் முன்னேற்றம் எந்த அளவுக்கு இருக்கும்—தமிழ் நாடு என்று நான் சொல்லும் போது, அமைச்சரவர்கள், "அந்தப் பெயரை நாங்கள் வைக்கவா போகிருேம், வீண் ஆசையில் அடிக்கடி சொல்கிறீர்கள்" என்று, கூறக்கூடும்! ஆனல் அந்தப் பெயரை வைக்கிருர்களா இல்லையா என்று நாடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது; இதை பின்னர் விளக்குவேன்—அதே நேரத் தில் தமிழ் நாட்டு மக்கள் வாழ்க்கைத்தரத்தை எந்த அளவுக்கு உயர்த்த முடியும் என்று அமைச்சரவர்கள் திட்ட வட்டமாகச் சொல்லவேண்டும். திட்டத்தில் சென்னைக்குக் கிடைத்த பங்குத் தொகையாவது நாங்கள் போய்க்கேட்காமலா கிடைத்தது; கேட்காமலா இருந்தோம், டில்லியிடம் வற்புறுத்தாமலா இருந் தோம்; ஒரே அமைச்சராகப் போய்க் கேட்டால், தேவையான அளவு சத்தம் போட்டுப் பேசக்கூடிய அளவுக்கு உடலில் பலம் இல்லாத காரணத்தால், பக்கத்தில் இரண்டு அமைச்சர்களை வைத்துக் கொண்டு, கேட்டு, கொடுத்தும் இருக்கிருர்களே என்றுகூட அமைச்சரவர்கள் பதில் கொடுக்கக்கூடும். உள்ளத் தில் ஆர்வம் இருந்ததை நான் குறைத்து மதிப்பிடவில்லை. நாட்டுக்கு நல்லது செய்ய நினைப்பார்கள் என்பதிலும் சந்தேகம் இல்லை. ஆனல் நினைக்கும் அளவு திட்டத்தை நிறைவேற்று வதற்கு இன்றைய தினம் வழி இல்லாமல் இருப்பதை ஏன் 1-00 p.m. இவர்கள் ஒப்புக்கொள்ளக்கூடாது? இந்தத் தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எத்தனை கோடி ரூபாய்க்குத் திட்டமிட்டார்கள் என்பதைக் குறித்து இந்தச் சட்ட மன்றத்தில் பேசத் தொடங்கிய காலத்தில் அமைச்சர் அவர்கள், 'தனித் தனியாகப் பேச வேண்டாம், சர்வ கட்சித் தலைவர்கள் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வரலாம்' என்று சொன்னுர்கள். அதன்படி திராவிடமுன்னேற்றக் கழகத் தலைவர் அறிஞர் அண்ணு அவர்களைக் கேட்டபோது, தம்முடைய கருத் தாக ஏறத்தாழ ஆயிரம் கோடி ரூபாய்க்கு ஒரு திட்டம் தந்தார் கள். திட்டத்திலே தவறு இருக்கிறது என்று அமைச்சர் அவர்கள் கருதினல், இன்னது தவறு, இன்னது நியாயம், இந்தப் புள்ளி விவரம் தவருனது, இது சரியானது, உங்கள் கணக்கில் இது குறை, எங்களுடைய கணக்குப்படி இது சரி என்று எடுத்துச் சொல்லியிருந்தால் நான் அவரைப் பாராட்டியிருக்க முடியும், ஏற்றுக்கொண்டிருக்க முடியும்.

இதே சட்டமன்றத்தில் பேசும்போது நிதி அமைச்சர் அவர்கள், முதன்முதலில் 250 கோடி, 260 கோடி ரூபாய் அளவு தான் கேட்க முடியும்' என்று தெரிவித்தார்கள். அப்பொழுது இத்தொகை மிகவும் குறைவு என்று வருத்தம் தெரிவித்துக் கண்டித்துரைத்தேன். அதற்குப் பிறகு, ஆயிரம் கோடி ரூபாய் அளவு அறிஞர் அண்ணு கேட்டவுடனே, அதைக் குறித்து நிதி அமைச்சர் அவர்கள், 'திராவிட முன்னேற்றக்கழகத் தலைவர் இப்படித் தெளிவு இல்லாமல், விளக்கம் இல்லாமல் ஆயிரம்

[Sri K. Anbazhagan] [24th January 1961

கோடி என்று சொல்லிவிட்டால் யார் தருவார்கள், இது பண்டாரத்தின் கதையாக இருக்கிறதே' என்று கேலியாகச் சொன்னார்கள்.

உண்மையாகவே, 'பண்டாரம்' என்றால் என்ன நினைப்பில் அமைச்சர் சொன்னார் என்று தெரியவில்லை. நல்ல எண்ணத்தோடுதான் சொல்லியிருக்க முடியும், அதனால்தான் பண்டாரம் என்று சொன்னார் என்று கருதுகிறேன். 'பண்டாரம்' என்றால் 'பொருள் உடையவர்', பொருள் காப்பாளர்' என்று பொருள். 'நிதி அமைச்சர்' என்றும் அதற்குப் பொருள். ஒரு வேளை நிதி அமைச்சர் அவர்கள் தன்னைத்தான் குறிக்கும் என்று தெரியாமலே சொல்லிவிட்டார் என்று நினைக்கிறேன். 'அவர் நிதி அமைச்சர் அல்லவே, நான் அல்லவோ நிதி அமைச்சர்' என்ற கோபத்திலேயும் சொல்லியிருக்கலாம். பழங்காலத்தில் 'பண்டாரத்தார்' என்றால் இந்தக் காலத்தில் நிதி அமைச்சர் என்று சொன்னால் என்ன பொருள் உண்டோ அப்படிப்பட்ட பொருள் தந்த சொல் இதுவாகும். அறிஞர் அண்ணா அவர்கள் ஆயிரம் கோடி கேட்டது தவறு என்று அமைச்சர் சொன்னார், ஆனால் அவரே நியாயமான அளவு கேட்க முடியாமல் கேட்ட 250 கோடியே தவறாகப் போய்விட்டதே. நான் அப்பொழுதே, இது மிகவும் குறைவு என்று கண்டித்தேன். பின்னரே சட்ட மன்றத்தில் பேசும்போது, '400 கோடிக்கே திட்டமிட்டுக் கேட்கலாம்' என்று அமைச்சர் தெரிவித்தார். அப்பொழுதும் சட்டமன்றத்தில் பேசும்போது நான் சொன்னேன், 'நீங்கள் 400 கோடி என்று சொல்கிறீர்களே, அது போதாது, அரசாங்கத்தின் மூலம் 400 கோடி என்று சொன்னால், வேறு துறைகளிலே, ப்ரைவேட் செக்டார் மூலமாக மிச்சமிருக்கும் 600 கோடி ஈடு ஆகிறதா என்று பார்க்கவேண்டும். பொதுத் துறையாக இருந்தாலும், தனியார் துறையாக இருந்தாலும், மொத்தத்திலே அந்த அளவு தொகை முதலீடு செய்யப்படுதற்கு ஏற்ப தமிழ் நாட்டுக்குத் திட்டம் வகுத்தால்தான் தமிழ் நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரம் உயரும்' என்று குறிப்பிட்டேன். அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால், அமைச்சர் ஏற்றுக்கொள்ளவில்லையே தவிர, அமைச்சரவையில் அந்தக் கருத்து இருந்தது. அமைச்சரவையில் அந்தக் கருத்து இருந்த காரணத்தால்தான் செப்டம்பர் 7-ந்தேதி அன்று மேல் சபையில் பேசிய தொழில்துறை அமைச்சர் திரு. வெங்கட்டராமன் அவர்கள், மேல் சபையில் காங்கிரஸ் ஆளுங்கட்சித் தலைவர் என்ற முறையில் அவர் சொல்லியுள்ளார், 'இன்றைய தினம் அரசாங்கத்தின் மூலம் ஏறத்தாழ 400 கோடிக்குத் திட்டம் போடுகிறோம், தனியார் துறையில் ரூ. 600 கோடி - அளவுக்கு திட்டம் வரும் என்று எதிர்பார்க்கிறோம். ஆக மொத்தத்தில் சேர்த்துப் பார்த்தால் ஆயிரம் கோடி ரூபாய்க்குத் திட்டம் தமிழ்நாட்டுக்கு வந்து சேரும்' என்று தொழில் அமைச்சர் திரு. வெங்கட்ராமன் அவர்கள் இவ்வாறு ஆயிரங்கோடி அளவு என்று தெரிவித்திருக்கிறார். நிதி அமைச்சரோ 400 கோடியுடன் நிற்கிறார். இதிலே எதை எடுத்துக்கொள்வது என்று நான் கேட்க விரும்புகிறேன். இந்த நிலையில் தி.மு.க. தலைவர் கேட்ட ஆயிரம் கோடியை கேலி பேச வானேன்?

24th January 1961] [Sri K. Anbazhagan]

ஆயிரம் கோடி ரூபாய் என்று அமைச்சர் தெரிவித்த ஆயிரம் கோடி தான் நியாயமான ஆயிரம் கோடியா? திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் குறிப்பிட்ட ஆயிரம் கோடி 'என்ன தனுஷ்கோடியா? ஆயிரம் கோடி என்பதில் என்ன வேறுபாடு இருக்கிறது? மொத்தத்தில் ஆயிரம் கோடி என்று யார் சொன்னாலும் ஒன்றுதானே? அமைச்சர் அவர்கள் மேல் சபையில் பேசும்போது சொல்லியிருப்பதைக் கவனிக்கவேண்டும். மேல் சபை பொறுப்புள்ள இடம். மதிக்கத்தக்க இடம். அங்கு ஆயிரம் கோடி என்று அரசாங்கக்கட்சித் தலைவரால் சொல்லப் பட்டிருக்கிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM : தலைவர்கள் கூடிப் பேசும் போது, திரு. அன்பழகன் அவர்கள் இல்லாத காரணத்தால் நான் சொல்கிறேன். அன்றைக்கு திரு. அண்ணாதுரை அவர்கள் ஆயிரம் கோடி நம்முடைய அரசாங்கத் திட்டத்திற்கு வேண்டு மென்று ஆலோசனை சொன்னார்கள்.

SRI K. ANBAZHAGAN : ஆயிரம் கோடி அரசாங்கத் திட்டத் தில் என்று சொன்னது கொள்கை அடிப்படையில். அரசாங்கத் தின் மூலமாக பல்வேறு தொழில்களும் நிறைவேற வேண்டு மென்று சொன்னது கொள்கை அடிப்படையில். ஆளும் கட்சிக்கே அரசாங்கத்துறை மூலமாக நிறைவேற்ற முடியும் என்ற நம்பிக்கை இல்லாதபோது, தனியார் துறையில் யாவது வகை செய்கிறோம் என்ற உறுதி அளித்தீர்களா? இப்பொழுதாவது அந்த உறுதி அளிப்பீர்களா என்று இந்த மன்றத்தில் நிதி அமைச்சர் அவர்களைக் கேட்கின்றேன். அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றும்போது, 1961-ல் தொடங்கி, 1965-66 வரையில் ஆயிரம் கோடி ரூபாய்க்கு தமிழ் நாட்டுக்கு என்று தனியார் துறையிலேயும் சேர்த்தேனும், திட்டம் நிறைவேறும் என்ற உறுதி அளிக்க முடியுமா என்று நான் கேட்கின்றேன். கொள்கை வேறுபாடு இருக்கலாம் ஆனால், முதலீடு செய்யவேண்டிய ரூபாயிலே வேறுபாடு எதற்காக இருக்க வேண்டும்?

அதுமட்டுமல்ல. ஆயிரம் கோடி என்று தெரிவித்து அகில இந்தியத் திட்டத்திற்கு மொத்தம் ரூ. 10,200 கோடி என்று கணக் கிட்டபோது, இன்றையதினம் அது ரூ. 12,000 கோடியை எட்டி யிருக்கிறது. மொத்தம் ரூ. 10,200 கோடி என்று இருந்தபோது ஆயிரம் கோடி தமிழ்நாட்டுக்கு என்று சொல்லும் அளவில் தொழில் அமைச்சர் கருதியிருப்பதை வரவேற்கிறோம். தொழில் அமைச்சர் அவர்களின் கருத்தை நிதி அமைச்சர் அவர்களும் இதுகாறும் மறுக்கவில்லை. ஆனால், அந்தக் கருத்தின்படி, இன்றைய தினம் அகில இந்தியாவுக்கு 12 ஆயிரம் கோடி ரூபாய் என்ற அளவுக்கு உயரும்போது, தமிழ்நாட்டுக்கு ஒரு ஆயிரத் தோடு இன்னும் 100 கோடி சேர்க்கலாம். தமிழ்நாட்டில் ஏறத் தாழ மூன்றரை கோடி மக்கள் இருப்பதாகக் கணக்கு இருக்

[Sri K. Anbazhagan] [24th January 1961]

கிறது. அகில இந்திய மக்கள் தொகை அடிப்படையில் பார்த்தால், பன்னிரண்டில் ஒரு பங்கு தமிழ்நாட்டு மக்கள் என்று கணக்கிடலாம். இந்தப் பன்னிரண்டில் ஒரு பங்கு மக்களுக்கு எந்தத்துறையிலாவது தொழிலும் வருவாயும் கிடைக்கவேண்டும். அந்தத் தொழில் கிடைக்க ஆயிரம் கோடி அளவு முதலீடு செய்யப்படும் என்று நிதி அமைச்சர் அவர்கள் உறுதிக் கொள்வாரா? மத்திய அரசாங்கத்தை ஏற்றுக்கொள்ளச் செய்வாரா? அந்த உறுதியை நிதி அமைச்சர் அவர்கள் தருவாரா என்று கேட்க விரும்புகிறேன்.

முதல் இரண்டு திட்டங்களை நிறைவேற்றியது பற்றி எவ்வளவு பெருமைப்படுகிறார்கள்? முதல் இரண்டு திட்டங்களைக் காங்கிரஸ் ஆட்சி நிறைவேற்றியதால் சுயராஜ்யத்தின் முழுப் பலனை இந்த நாடு பெற்று விட்டது என்றும், அதனால் வாழ்க்கைத்தரம் உயர்ந்துவிட்டது என்றும்—விலைவாசி ஏற்றத்தைப்பற்றி எண்ணிக்கூடப் பார்க்காமல், மக்கள் படும் வேதனையை எண்ணிப் பார்க்காமல், ஏழை மக்கள் வரவரக் கீழே போய்க்கொண்டிருப்பதை எண்ணிப் பார்க்காமல்—முதல் இரண்டு திட்டங்களினால் ஏற்பட்ட பலன்களைப்பற்றியே பேசுகிறார்கள்.

முதல் திட்டத்தில் மத்திய அரசினர் அதைப்பற்றிக்கூறும் போது, ரூ. 2,200 கோடிக்குத் திட்டம் போட்டுவிட்டோம் என்று சொன்னார்கள். மறுபடியும் அது 2,338 கோடிக்கு உயர்ந்தது. கடைசியாக முடிக்கிறபோது ஏறத்தாழ 2,000 கோடியிலே முடிந்தது. அரசாங்கத்தினுடைய துறையிலேயும் தனியார் துறையிலேயும் சேர்த்துப் பார்க்கும்போது 3,360 கோடி ஆயிற்று. அதில் சென்னை மாநிலத்திற்குக் கிடைக்கவேண்டிய பங்கு ஏறத்தாழ 280 கோடி ரூபாய் ஆகும். எனக்குக் கிடைத்த புள்ளி விவரத்தைச் சொல்கிறேன்—என்னுடைய புள்ளி விவரம் தவறு என்றால் அமைச்சர் அவர்கள் அதை விளக்கட்டும். ஏதோ நான் பன்னிரண்டில் ஒரு பங்கு என்று சொன்னது தவறாமல், பதின்மூன்றில் ஒரு பங்குதான் கிடைக்கலாம் என்றால் அவர்கள் புள்ளி விவரம் தரட்டும். நமக்குக் கிடைக்கவேண்டிய தொகையோ ஏறத்தாழ 280 கோடி ரூபாய் ஆகும்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : On a point of order Sir, When another hon. Member wants to know the truth, the hon. Member (Sri K. Anbazhagan) must be able to substantiate it. May I know the documents from which the hon. Member is quoting figures?

DEPUTY SPEAKER : It is not a point of order. The hon. Member (Srimathi T. N. Anandanayaki) wants some information. I hope the hon. Member (Sri K. Anbazhagan) will explain.

SRI K. ANBAZHAGAN : அவைத் தலைவர் அவர்களே, நான் பேசுகிறபோது தெளிவு பெறாதவர்கள் தெளிவைப் பெறுவதற்கு முயற்சித்ததற்காக நான் அவர்களைப் பாராட்டுகிறேன். நான்

குறிப்பிட்டது, முதல் ஐந்தாண்டுத் திட்டம் பற்றிய அரசாங்க வெளியீடுகளில் உள்ள புள்ளி விவரங்களில் சேர்ந்திருக்கிறது. அதைப்பற்றிய பல்வேறு குறிப்புகள் மத்திய அரசாங்கத்தால் வெளியிட்ட ஏடுகளிலே இருக்கின்றன. மாநில அரசாங்கம் வெளியிட்ட ஏடுகளிலும் இருக்கின்றன. நான் குறிப்பிடும் இந்தப் புள்ளி விவரம் தவறு என்றால் அமைச்சர் அவர்கள் விளக்க வேண்டும். அதற்கான புள்ளி விவரங்களை இன்றையதினமோ நாளையதினமோ தெரிவிக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்களை வேண்டிக் கேட்டுக்கொள்கின்றேன்.

தமிழ்நாட்டுக்கு 280 கோடி ரூபாய் அளவுக்குக் கிடைக்க வேண்டும். ஆனால் அன்று கேட்ட தொகையே 97 கோடி ரூபாய் தான். மாற்றங்களுக்குப் பிறகு கொடுக்க இசைந்தது 86 கோடி. முதல் திட்டத்தில் செலவிட்டது 80 கோடி ரூபாய். ஆக, ஆறு கோடி ரூபாய் செலவழிக்கப்படாமல் விடப்பட்டது என்பதை இந்த நேரத்தில் நினைவூட்ட விரும்புகிறேன். இரண்டாவது திட்டத்தில் பத்து, பதினைந்து கோடி ரூபாய் அதிகம் செலவழித்தால் அதைப் பெருமையாகக் கருதுகிறார்கள். முதல் திட்டத்திலே செலவாகாததால் இழந்தது ஆறு கோடி ரூபாய். ஆனால், வரவேண்டிய 280 கோடியில் வந்தது ஏறத்தாழ 80 கோடி ரூபாய்தான். ஒருவேளை, தனியார் துறையில் பத்து கோடி இருக்கும் என்று சொல்லலாம். நெய்வேலித் திட்டத்திற்குப் போட்ட தொகை 10 அல்லது 15 கோடி என்று சொல்லலாம். கோச் பாக்டரியில் 5 கோடி செலவிட்டிருக்கலாம். ஆனால், மொத்தம் செலவழித்ததைக் கணக்கெடுத்து பார்த்தால் 105 முதல் 110 கோடி ரூபாய்தான் முதலீடாக இருக்கும். கிடைக்க வேண்டிய தொகை 280 கோடி ரூபாய். கிடைக்கத் தவறியது முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஏறத்தாழ 150 கோடி ரூபாய். என் புள்ளி விவரம் தவறு என்றால், அமைச்சர் அவர்கள் விளக்கம் தெரிவிக்கலாம்.

முதல் திட்டத்தில் நம் மாநிலத்தில் ரயில்வேக்கான பங்குத் தொகை எவ்வளவு? புதிய ரயில் பாதை போடுவதில் கிடைக்க வேண்டிய பங்கு எவ்வளவு? எந்த அளவு ரயில் பாதை போட்டார்கள்? அமைச்சருக்குப் புள்ளி விவரம் தெரியும். அவர்களே வெட்கப்பட்டிருக்கிறார்கள், வேதனைப் பட்டிருக்கிறார்கள். மத்திய அரசாங்கத்திடம் குறைபட்டுச் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள், புது ரயில் பாதைகள் போடப்படும் என்ற நம்பிக்கையோடு ஊர் போய்ச் சேருங்கள் என்று ரயிலில் வழி அனுப்பி வைத்திருக்கிறார்கள். முதல் திட்டத்தில் ஏமாற்றப் பட்ட புள்ளி விவரம் அமைச்சருக்குத் தெரியாதா?

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மொத்தம் பேசப்பட்ட தொகை 4,800 கோடி ரூபாய். அது உடனே 4,600 கோடி ரூபாய் ஆயிற்று. பொதுத் துறையிலே செலவழிக்கப்பட்டது 3,650 கோடி ரூபாய். அது தவிர தனியார் துறையிலே 3,300 கோடி ரூபாய் ஆயிற்று. மொத்தத்தில் 6,750 கோடி வரையில் அகில

[Sri K. Anbazhagan] [24th January 1961

இந்தியத் திட்டத்தை நிறைவேற்றும்போது, நம்முடைய மாநிலத்திற்கு என்று தொடக்கத்தில் கேட்கப்பட்டது 400 கோடி ரூபாய். கிடைத்தது ஏறத்தாழ 152 கோடி ரூபாய்தான். கேட்டதற்கும் கிடைத்ததற்கும் இடையே வித்தியாசம் 250 கோடி ரூபாய். மேற்கொண்டு செய்த முயற்சியால் அவர்கள் மேலும் பெற்றது 15 முதல் 20 கோடி ரூபாய். ஆகையால், மொத்தத்தில் கணக்கிடும்போது, நெய்வேலி, கோச் பாக்டரி, மத்திய அரசாங்கம் மேற்கொண்ட தொழில்கள், தனியார் துறையில் பர்மிட், லைசன்ஸ் வழங்கியது இவையெல்லாம் சேர்த்துப்பார்த்தால் கூட ஏறத்தாழ 250 கோடி ஆகும். அகில இந்தியாவுக்குமான மொத்தம் 6,750 கோடி ரூபாயில் மக்கள் தொகையின்படி சென்னை மாநிலத்திற்கு ஏறத்தாழ 560 கோடி ரூபாய் வழங்கப்பட்டிருக்க வேண்டும், பல்வேறு துறைகளிலே. எங்கே 560 கோடி ரூபாய்? மொத்தத்தில் 280 கோடிக்கே வழியில்லையே. ஏமாந்து கைவிடப்பட்ட தொகை 300 கோடி ஆயிற்றே. இதற்கு என்ன மறுப்பைச் சொல்ல முடியும்? 'அன்பழகன் அவசரக்காரன்' என்று சொல்வார்களானால், அப்படியே ஏற்றுக் கொண்டாலும், புள்ளி விவரத்தில் ஏதோ பத்து, இருபது கோடி ரூபாய் அளவில் வித்தியாசம் இருக்கலாமே தவிர, அதற்குமேல் இருக்கமுடியாதே? இப்படி முதலாவது, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்களில் தென்னகம் புறக்கணிக்கப்பட்டிருக்கிறபொழுது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் கூட நமக்கு உரிய பங்கைக் கொடுக்கவில்லை என்றால் இங்குள்ள மக்களுடைய வாழ்க்கைத்தரம் எவ்வாறு உயர முடியும்?

ரெயில்வே துறையை எடுத்துக்கொண்டால் தென்னகத்தில் ஏதாவது புது ரெயில் பாதைகள் போடப்பட்டதா? அகில இந்தியாவுக்குமாக 156 கோடி ரூபாய் ரெயில் பாதை அமைப்புக்காக ஒதுக்கினர்கள் என்றால் அதிலே தென்னகத்தைப் பொறுத்தவரையில் செலவழிக்கப்பட்ட தொகை எவ்வளவு? அமைச்சர் அவர்களுக்குத் தெரியாதா? 92 லட்சம் ரூபாய் தான் என்பது. 156 கோடி ரூபாய் நான்கு மண்டலங்களுக்கும் என்று சேர்த்து ஒதுக்கிய தொகையை செலவழிக்கிறபோது அதில் நான்கில் ஒரு பங்காவது தென்மண்டலத்திற்கு என்று செலவழித்திருக்க வேண்டாமா? தவறிப் போனால் ஐந்தில் ஒரு பங்காவது செலவழித்திருக்க வேண்டும். அதிகமாக இருந்தால் 6-ல் ஒரு பங்காவது செலவழித்திருக்க வேண்டும். தென்னகம் கொஞ்சம் ஒதுக்கப்படுத்துவதற்குரியது என்று எண்ணியிருந்தாலும் 8-ல் ஒரு பங்காவது செலவழித்திருக்கவேண்டும். ஆனல் செலவழித்தது 92 லட்சம் ரூபாய் மட்டுமே—மொத்த தொகையில் 150-ல் ஒரு பங்கு கூட இல்லையே! புதிய ரெயில் பாதை என்று எதுவுமே இங்கு போடப்படவில்லை. இதற்காக அமைச்சர் அவர்கள் ரயில் ஏருமல் இருந்தார்களா? அல்லது இதைக் கண்டித்து வாய் திறந்து பேசாமலிருந்தால் தான் ரெயில் பாதைகள் தானே வந்து சேருமா? இப்படிப் பலவகையிலும் தென்னகம் வஞ்சிக்கப்படுகிறது, ஏமாற்றப்படுகிறது என்று சொன்னல் நாங்கள் இல்லாத ஒன்றைச்

24th January 1961] [Sri K. Anbazhagan]

சொல்கிறேமா? "தென்னகம் தேய்கிறது" என்று நாங்கள் சொன்னால், தொட்டுப் பார்த்து தடவிப்பார்த்து எங்கே தேய்கிறது என்று கேட்கக் கூடிய செய்தியா இது? திருநெல்வேலிக்கும் நாஞ்சில் நாட்டுக்கும் ரெயில் பாதை போட்டால் அங்குள்ளவர்கள் தாம் ஏறி இறங்கமாட்டார்களா? அல்லது ரெயில் பாதை அந்த இடத்தில் போட்டால் அங்குள்ளவர்கள் காங்கிரஸை ஆதரிக்காமல் போய்விடுவார்களா? விருதுநகரில் உள்ள வியாபாரிகள் சங்கத்தார் அருப்புக்கோட்டை ரயில் பாதையை உடனடியாகப் போட வேண்டும் என்று எத்தனை முறை எழுதியிருக்கிறார்கள்? இன்று கூட விண்ணப்பம் அனுப்பியிருக்கிறார்களே! விருதுநகரைச் சேர்ந்தவர் தான் முதல் அமைச்சர். ஏன் அந்த ரெயில் பாதையையாவது போட்டாகவேண்டும் என்று வற்புறுத்தவில்லை. சேலத்திற்கும், பங்களூருக்கும் இடையில், கோவைக்கும், மைசூருக்கும் இடையில் ரெயில் பாதை போட முடியும் என்று எத்தனை முறைகள் பேசினார்கள். ஆசை காட்டினார்கள். புது பெண் ஒருத்தியை எப்படியாவது அழைத்துவந்து திருமணம் செய்து கொண்டுவிட வேண்டும் என்று விரும்பும் இளைஞன் ஒருவன் அதற்காக அவளைப் புகழ்ந்து வருணிப்பதைப் போல அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் எத்தனைமுறை அழகாகப்பேசி அந்த ஆசையை ஊட்டினார்கள். அதை நிறைவேற்றிக் கொடுப்பதற்கு அமைச்சர் அவர்கள் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் என்ன? ஏன் முடியவில்லை?

இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றிய புள்ளி விவரங்களையே நோக்கட்டும். ஆரம்பத்தில் 7,500 கோடியில் திட்டம் உருவாக்க ஆலோசிக்கப்பட்டது. அது 9,900 கோடியாக முதல் பேச்சிலேயே உயர்ந்தது. அப்புறம் 10,200 கோடி என்றார்கள். அப்புறம் இன்று 12 ஆயிரம் கோடி ஆகும் என்கிறார்கள். அது நிறைவேறக்கூடியதா, நிறைவேற முடியாததா என்பது இருக்கட்டும். ஆனால் 11 ஆயிரம் கோடியே நிறைவேறுகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். தமிழகத்திற்கு அதில் 12-ல் ஒரு பங்கு இல்லையென்று சொல்லிவிட முடியுமா? நமக்குரிய பங்கைப் பெறுவதற்கு அமைச்சர் அவர்கள் என்ன வழிவகைகளை மேற்கொண்டார்கள் என்று கேட்கின்றேன்.

DEPUTY SPEAKER: The hon. Member has got only two more minutes.

SRI K. ANBAZHAGAN: எங்கள் கட்சித் தலைவருக்குப் பதிலாக நான் பேசுவதற்கு கனம் சபா நாயகர் அவர்கள் அரை மணி நேரம் ஒதுக்கினார்கள். அந்த நேரம் அளவுக்கு நீங்கள் அனுமதி அளித்தால் தொடர்ந்து பேசுகிறேன். இல்லாவிட்டால் இத்துடன் முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: In that case, the hon. Member may continue his speech.

[24th January 1961

**SRI K. ANBAZHAGAN :** எனவே எந்த அளவு நமக்குச் சேர வேண்டுமோ அந்த அளவு தொகை நமக்குக் கொடுக்கப்படவில்லை. எந்த அளவு தொகை கொடுத்தால் தமிழகம் முன்னேற முடியுமோ அந்த அளவு கொடுக்காவிட்டாலும் மற்ற வட்டாரங்களில் செலவழிக்கப்படும் அளவாவது நமக்கும் கொடுக்கவேண்டும் என்று நம்முடைய அமைச்சர் அவர்கள் வற்புறுத்துவதற்கென்ன? வட்டாரங்களுக்குத் தொகை ஒதுக்குகிறபோது அந்த அந்த வட்டாரங்களில் உள்ள மக்களுடைய வாழ்க்கைத்தரத்தை கணக்கில் எடுத்துக்கொண்டு, பிற்பட்ட வட்டாரங்களில் உள்ள மக்களின் நிலையை உயர்த்துவதற்கு ஏற்றவகையில் அதிக தொகை ஒதுக்க வேண்டும் என்று கோருகிறோம். பிற்பட்ட வகுப்பினர்களின் முன்னேற்றத்துக்கு தனியாக தொகை ஒதுக்க வில்லையா ? அதைப் போல மண்டலங்களில் பிற்பட்ட மண்டலங்களுக்கு அதிகத் தொகை ஒதுக்கி அவற்றை முன்னேற்றம் அடையச் செய்ய வேண்டும் அல்லவா ? அப்படிச் செய்தாலொழிய ஒன்றுக் கொன்று சம அந்தஸ்துடன் வாழ்வதற்கு முடியுமா ? இன்றைய தினம் தமிழ்நாடாக இருக்கட்டும், அல்லது தென்மண்டலமாகவே தான் இருக்கட்டும். இங்குள்ளவர்களுடைய வாழ்க்கைத் தரம் எப்படி இருக்கிறது ? இதர ராஜ்யத்திலுள்ளவர்களுடைய வாழ்க்கைத் தரம் எப்படி இருக்கிறது ? இதுபற்றிய புள்ளி விவரம் சிலவற்றைப் படித்துக் காட்ட விரும்புகிறேன். கருத்துக்காக மட்டுமேதான். மன்னிக்கவேண்டும்.

"It is shown there that the advance will be greatest in the Punjab at 138·56 per cent, Orissa at 114·86 per cent and Gujerat at 101·02 per cent.

இப்படி இந்த ராஜ்யங்கள் எல்லாவற்றிலும் 101 சத விகிதம், 114 சத விகிதம், 138 சத விகிதம் என்கிற அளவுக்கு வருமானத்தில் உயர்வு ஏற்பட்டிருக்கிறது. ஆனால் அதே நேரத்தில் Comparatively slow movers will be Andhra, Kerala and Madras என்று சொல்லப் படுகிறது. மண்டலங்களின் அடிப்படையில் மூன்றுவது திட்ட காலத்தில் எதிர்பார்க்கப்படுவது என்ன ?

"The Southern Zone is estimated to record a rise of only 25·05 per cent over the Third Plan period, against 35·83 per cent in the Northern Zone and 36·57 per cent in the Eastern Zone. The Central Zone will increase by only 26·50 per cent slightly faster than the Southeren Zone, but slower than all other Zones."

அமைச்சர் அவர்களுக்கு இது தெரியாதா ? தெரிந்தும் நான் அந்தப் புள்ளிவிவரங்களைச் சொல்வதற்குக் காரணம் திட்டகாலத்தில் 1950-51-ல் இருந்ததற்கு மேல் 1965-66-ல், பீகாரில் 51 சத விகிதம் வளர்ச்சி ஏற்படப்போவதிருக்க, பஞ்சாபில் 72 சத விகிதம் வளர்ச்சி ஏற்படப்போவதிருக்க, வங்காளத்தில் 60 சத விகிதம் வளர்ச்சி ஏற்படப்போவதிருக்க, சென்னையில் எதிர்பார்க்கப்படுவது 26·79 சத விகிதம்தான்; பொருளாதார வளர்ச்சியில் தென்னகம் எத்தனை கீழான நிலையில் இருக்கப்போகிறது என்பது

24th January 1961] [Sri K. Anbazhagan]

அமைச்சர் அவர்களுக்குத் தெரியாதா? அதற்கென்ன; வேண்டு மென்றால் மணிப்பூரைப் பார் என்பார். இன்னொரு பகுதியைப் பார் என்பார். இந்தப் பகுதிகளில் குறைவாக இருக்கிறது என்பதனால் நாம் அதிகமாக வளர்ந்துவிட்டோம் என்று நினைத்துக் கொண்டு விட முடியுமா? இப்படிக் குறைந்திருக்கிற வருமானத்தை ஈடு செய்வதற்கு எங்கே தொகை கேட்டீர்கள்? பின் தங்கியிருக்கிற நிலைமையை மாற்றுவதற்கு என்ன ஏற்பாடு செய்தீர்கள்? காங்கிரஸ் அங்கத்தினர்கள் பேசும்போது பின் தங்கிய வகுப்புக்கு உதவித் தொகை அதிகம் கொடுக்கவேண்டு மென்று கேட்கிறார்கள். பிற்பட்ட வகுப்புக்கு உதவி செய்யலாம். பிற்பட்ட மண்டலத்திற்கு அந்த உதவித் தொகை எங்கே? தென்னகம் விவசாயத்துறையில், தொழில் துறையில், எல்லாவகை யிலும் பிற்பட்ட நிலையில் இருக்கிறது என்றால் இல்லை என்பதற்கு நீங்கள் என்ன ஆதாரம் கொடுக்கிறீர்கள்? நேற்று இருந்ததை விட இன்று முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லலாம். நேற்று இருந்ததைவிட இன்று மற்ற இடங்களில் ஏற்பட்டிருக்கிற முன்னேற்றம் என்ன என்பதோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஜனநாயக அரசியல் வாழ்வில் ஏற்பட்டிருக்கிற போட்டாபோட்டிச் சூழ்நிலையில் நாம் மிகவும் பின் தங்கிவிட்டோம். இப்படிப் பின் தங்கிவிட்டால் தமிழகம் என்றென்றும் தலைதூக்க முடியாத நிலைமை வந்துவிடும் என்று உணர்த்த விரும்புகிறேன். தமிழகத் தின் நல்வாழ்வுக்கு அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் என்ன வழிவகுத்திருக்கிறார்கள்? இந்தப் புள்ளிவிவரப்படி . . .

SRIMATHI T. N. ANANDANAYAKI: On a point of Order, Sir, according to May's Parliamentary practice when a Member reads an extract, he must tell the House from which book he is quoting. The hon. Member cannot brief the House from any bazaar book. We must know what it is.

DEPUTY SPEAKER: The hon. Member will explain. He has got some figures.

SRI K. ANBAZHAGAN: From Regional Incomes over the Three Plans collected by Sri P. K. Sarangapani Mudaliar from the Quarterly Report of the Indian Institute of Public Opinion.

"பசார்" என்ற சொல்லைக்கேட்டு நான் எதும் வெறுப்படைய வில்லை. பசார் நல்ல இடம்தான். ஆனால் "பசாரைச்" சில பேர்தான் கெடுத்துவிடுகிறார்கள். இந்தப் புள்ளி விபரங்களைத்தான் அமைச்சர் வெங்கட்டராமன் அவர்கள் மத்திய சர்க்காரில் குறிப்பிட்டு பேசினார்கள். பொருளா தாரத் துறையில் நிபுணர்களாக இருக்கக்கூடியவர்கள் தந்த இந்தப் புள்ளிவிவரங்கள் தவறு என்றால் அதைவிட மகா மேதாவிகளாக இருக்கக் கூடியவர்கள்தான் வேறு புள்ளிவிவரங் களைத் தரவேண்டும். அதைவிட்டு இந்தப் புள்ளிவிவரங்கள் தெரியாதது போல நடிக்கிறார்கள் அமைச்சர்கள். இப்படிப்பட்ட நடிப்புக்கு இடம் கலைத்துறையிலேயே அன்றி அரசியலில் அல்ல.

[Sri K. Anbazhagan] [24th January 1961

தமிழ்நாடு பொருளாதாரத்துறையில், தொழில்துறையில் எவ்வளவு தேய்ந்து வருகிறது, புறக்கணிக்கப்பட்டு வருகிறது என்பதை உண்மையான புள்ளிவிவரங்களோடு ஒப்பிட்டுப்பார்த்தால், இப்படி எல்லாவகையிலும், பின்தங்கியிருக்கிற நிலைமையைப் போக்குவதற்கு வங்காளத்தின் முதல் மந்திரியைவிடத் தீவிரமாகப் போராடவேண்டிய நிலைமை அதிகம் ஏற்படும். போராடாவிட்டால் தமிழ்நாடு தலை தூக்காது. தமிழகம் பூக்காது, காய்க்காது. தமிழ் மக்கள் வாழ்வு மணக்காது, வளம் பெருது. உங்கள் உணர்ச்சியை டில்லிக்குக் காட்டினுலொழிய தமிழ்நாடு செழித்து வாழாது. தமிழ்நாடு எப்படியோ ஒழியட்டும், நாங்கள் அமைச்சராக இருந்தால்போதும் என்று நீங்கள் நினைத்தால் அதற்காகவே, டில்லிக்குத் திருப்தி ஏற்படும்படி எங்களையெல்லாம்—எதிர்க்கட்சிகளை எல்லாம்—நீங்கள் ஒழிக்கத் திட்டமிட்டால்.

THE HON. SRI C. SUBRAMANIAM: நாங்களா ஒழிக்கப் போகிறோம்?

SRI K. ANBAZHAGAN: தாங்களை ஒழிந்துவிடுவீர்கள் என்று அமைச்சர் ஆசையை வெளிப்படுத்துகிறார். ஆனால் யார் ஒழியப் போகிறார்கள் என்பது 1962-மார்ச்சில் தெரியும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் நமக்கு ஏற்பட்ட ஏமாற்றம் 150 கோடி; இரண்டாவது திட்டத்தில் ஏமாற்றம் 300 கோடி; ஆக இரண்டையும் சேர்த்துக் கணக்கிட்டால் 450 கோடிக்கு நாம் ஏமாந்து கைவிட்டிருந்தாலும், தூத்துக்குடி துறைமுகத்தை கொஞ்சம் ஆழப் படுத்துங்கள் என்று கேட்பதற்கு எத்தனை தடவை டில்லி போய் வருவது? எத்தனை முறை போராடுவது? நெய்வேலித் திட்டத்தை சிறிது துரிதப்படுத்துங்கள் என்று எத்தனை முறை போய்க் கேட்பது? சேலத்திலுள்ள இரும்பை வெளிக்கொண்டு வாருங்கள் என்று கேட்க எத்தனை தடவை ஓடிச் செல்வது? இதற்காக செலவான கட்டணச் செலவைக் கொண்டே ஒன்றிரண்டு திட்டங்களைக் கொண்டு வரலாம் என்று கூடத் தோன்றுமே! ஆக, மத்திய அரசாங்கத்தின் ஆதிக்கத்தில் தெற்கு தேய்கிறது என்று சொல்வதில் என்ன தவறு இருக்கிறது? மற்றொன்று, இரும்பு உருக்குத் தொழிற்சாலை ஏற்படாத வரையில் எந்த நாடும் வளராது. அதுவும் தமிழ் நாட்டைப் பொறுத்த மட்டில், இங்கு இரும்பு உருக்குத் தொழிற்சாலை ஏற்பட்டாலொழிய தமிழ்நாட்டிற்கு தொழில் துறை முன்னேற்றமில்லை, வாழ்வில்லை. ஆகவே, இங்கு ஒரு இரும்பு உருக்குத் தொழிற்சாலை கொண்டு வர இந்த அரசாங்கம் மனமாற முன்வரவேண்டும். எப்படி முன்வரும்? அங்குள்ளவர்களுக்கு, துர்க்காபுரில் அக்கறையிருக்கிறதே தவிர, பிலாயில்தான் கருத்து இருக்கிறதே தவிர, ரூர்கேலாவில்தான் முக்கிய விருப்பம் இருக்கிறதே தவிர, பொக்காராவில் இன்னொரு இரும்பு உருக்குத் தொழிற்சாலை ஏற்படுத்துவது நோக்கமாக இருக்கிறதே தவிர, இங்கு சேலத்தில் இரும்பு உருக்கு தொழிற்சாலை அமைப்பது, பரிசீலனை கட்டத்திலிருந்து விடுபட்டு

24th January 1961] [Sri K. Anbazhagan]

25 கோடி அடையாளமாக ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பது தவிர திட்டவட்டமாக என்ன சொல்லப்பட்டிருக்கிறது? என்ன செய்திருக்கிறார்கள்? நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி இல்லையா? வேண்டிய சாதனங்கள் கிடைக்கவில்லையா? ஆனால் தமிழ்நாட்டு அமைச்சர்களுக்கு அதை உடனடியாக நிறைவேற்ற ஆற்றல் இல்லை என்றுதானே பொருள். ஆனால் வடக்கே உள்ளவர்களுக்கு மட்டும் அதற்கு வேண்டிய ஆற்றல் இருக்கிறது! தமிழ் நாட்டில் ஒரு இரும்பு உருக்குத் தொழிற்சாலை ஏற்பட்டாலொழிய நமது நாட்டின் முன்னேற்றம் ஏறத்தாழ 20 ஆண்டுகளுக்குப் பின் தங்கியே போக நேரிடும். அது வடநாட்டிற்கும் தென்னாட்டிற்கும் இடையே உள்ள வித்தியாசத்தை அதிகப்படுத்தத்தான் செய்யும். அதற்குப் பின்னர் இந்தியாவின் ஒற்றுமை பற்றிப் பேசுகிறவர்கள் மிக மிக வெகுளிகளாகத்தான் கருதப்படுவார்கள், லாப நோக்குடையவர்கள் என்றுதான் அவர்கள் கருதப்படுவார்கள். அவர்களை நாட்டு மக்கள் மதிக்கமாட்டார்கள். அவர்களை ஏற்றுக்கொள்ளவும்மாட்டார்கள். தமிழ்நாட்டில் இரும்பு உருக்குத் தொழிற்சாலை ஏற்படாத காரணத்தால், தூத்துக்குடி துறைமுகத்தை ஆழ்கடல் துறைமுகமாக ஆக்காத காரணத்தால் தமிழ்நாட்டில் தொழில்வளம் மங்கிப் போய்விட்டது. எனவே, சர்தார் வேதரத்னம் அவர்கள் முன்னர் சொன்னதுபோல் சிறுசிறு துறைமுகங்கள் கவனிக்கப்படாமல் இருக்கிற காரணத்தால் தமிழ்நாடு பின்தங்கிக் கிடக்கிறது. சென்னைமா நகராட்சி சில நெடுஞ்சாலைகளைப் பழுது பார்க்காத காரணத்தால் காங்கிரஸ் அதில் விழுந்து நொறுங்கி விடுமோ என்று வேதனைப்படுகிற காங்கிரஸ் அரசாங்கம், தமிழ்நாடு முழுவதும் பழுதடைந்து கிடக்கிற நெடுஞ்சாலைகளை எப்படி வைத்திருக்கிறது? சென்னை-திருச்சி நெடுஞ்சாலையில் ஒரு பாலம் பழுதடைந்தால் அதைப் பழுது பார்ப்பதற்குத் தாமதமாவதில் முப்பது மைல் சுற்றி வர வேண்டியிருக்கிறது. இன்று அந்தளவு கேவலமாகத்தான் நெடுஞ்சாலை நிலை இருக்கிறது. நெடுஞ்சாலைகள் எங்கு சீராக ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கின்றன? வட நாட்டில் பெரிய நகரங்களிடையே 100 மைல் அளவு எக்ஸ்பிரஸ் ஹைவேஸ் ரோடு போட்டுள்ளனர். அதேபோல் தமிழகத்தில் போட வேண்டுமென்றால், நமக்கு அளிக்க அவர்களுக்கு மனம் இல்லை. கேட்பதற்கு தைரியமும் இல்லை. கிடைக்கலாம் என்ற நம்பிக்கையும் இல்லை. ஆக, கவர்னர் அவர்கள் அவர்களது உரையில் என்ன சொல்லியிருந்தாலும் இன்றையதினம் அதை மக்கள் விரும்பி வரவேற்க மாட்டார்கள். (மணியடிக்கப்பட்டது) கடைசியாக ஒன்று சொல்கிறேன். வேறு ஒன்றும் செய்ய இல்லாவிட்டாலும் நல்லெண்ணத்தையாவது ஏன் காட்டக் கூடாது? பொது மக்களிடம் உங்கள் நல்லெண்ணத்தை காட்டிக்கொள்வீர்களானால் உங்கள் திறமையற்ற தன்மையை நான் வேதனையுடன் எடுத்துச் சொல்லமாட்டேன். நமது மாநிலத்திற்குத் தமிழ்நாடு என்று பெயர் வைக்க வேண்டுமென்று மக்கள் கேட்கிறார்கள், எதிர் கட்சியினர் அத்தனை பேரும் கேட்கிறார்கள். ஆளும் கட்சியைச் சார்ந்தவர்கள்கூட மக்களைச் சந்திக்கும்போது எங்களுக்குக் கூட தமிழ் நாடு என்று பெயர் வைக்க ஆசைதான், ஆனால் சூழ்

[Sri K. Anbazhagan] [24th January 1961

நிலே இடம் தரவில்லே என்று சொல்கிருர்கள். ஏன் தமிழ் நாடு என்று பெயர் வைக்க ஆட்சியாளருக்கு மனம் வரவில்லே? நம் நாட்டிற்கு எல்லே வகுப்பது தமிழ் மொழிதானே. நிதியமைச்சர் அவர்கள் தமிழ் மொழியை மதிக்கிறவர்கள். அப்படி மொழியை மிகவும் மதிப்பவர்கள் ஏன் தமிழ்நாட்டை மதித்து அப்பெயர் வைக்கக் கூடாது? மாற்றுக்கட்சியினர் சொல்கிருர்களே என்பதற்காக அப்படிச் செய்யவில்லே என்ருல், அந்த ஆளுங்கட்சி வாழாது, அந்தக் கட்சியின் கருத்துக்களை மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். தமிழ்நாடு என்று பெயர் வைக்க வேண்டுமென்று கேட்டு உண்ணுமலிருந்து உத்தமர் சங்கரலிங்க நாடார் உயிர் நீத்தார். தமிழ் நாடு என்று பெயர் வைக்க வேண்டுமென்று காலஞ் சென்ற திரு. வி. க. கேட்டுக் கொண்டார். தமிழ் நாடு என்று பெயரைச் சொல்லிச் சொல்லி வ. உ. சி. வழி காட்டினர். செந்தமிழ் நாடு என்று களிப்புடன் பாரதி பாடினர். காங்கிரஸி லிருந்து வெளியே வந்திருக்கும் திரு மா.பொ.சி.-யும் அதையே முன் வைத்துப் போராடுகிருர். அரசியல் கருத்துக்களில் மாறுபட் டிருக்கும் பிரஜா சோஷியலிஸ்ட் கட்சியும், திராவிட முன்னேற்றக் கழகமும், கம்யூனிஸ்ட் கட்சியும், சுதந்திரா கட்சியும் இங்குள்ள அத்தனை கட்சிகளும் சொல்கின்றன, 'தமிழ் நாடு' என்று பெயர் வைக்க வேண்டுமென்று. இந்த நாட்டிற்குத் தமிழ் நாடு என்று பெயர் வைக்க மாட்டோம் என்று சொன்னுல் தமிழ்நாட்டிற்கு காங்கிரஸ் கட்சி ஏற்றதல்ல என்றுதான் (மணி அடிக்கப்பட்டது) மக்கள் எண்ணுவார்கள். கவர்னர் உரையில் இம்மாநிலத்திற்குத் தமிழ் நாடு என்னும் பெயரை இந்த அரசாங்கம் ஏற்றுவைக்கும் என்று சொல்லியிருந்தால் அந்த ஒன்றுக்காவது நாங்கள் மனமாற நன்றி செலுத்தியிருப்போம், ஆனல் அது கூடக் கூறப்படவில்லே அதைக்கூடத் தெரிவிக்க கவர்னருக்கு மனம் இல்லாததால் எனது ஆழ்ந்த வருத்தத்தை தமிழ்த்தாயின் சார்பில் தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: The House will now adjourn and meet again at 8-30 a.m. to-morrow.

1-25 p.m. The House then adjourned.

V—PAPER PLACED ON THE TABLE OF THE HOUSE.

A.—STATUTORY RULES AND ORDERS

146. *Notification issued with G.O. No. 3759, Revenue, dated 19th September 1960, under the Madras General Sales Tax Act, 1959 (Laid on the Table of the House under Section 53 (5) of the Madras General Sales Tax Act, 1959 (Madras Act I of 1959).*

B.—REPORTS' NOTIFICATIONS AND OTHER PAPERS

37. *Decisions of the Zonal Ministerial Committee as approved by the Southern Zonal Council regarding safeguards to be afforded to the Linguistic minorities issued in G.O. No. 1281, Public (Partition), dated 11th August 1960.*